# ஜான்சன் சாகசம்

## அமெரிக்க நெருக்கடியும் புதிய சூழ்ச்சியும்!

**வட வியட்நாமின் பெரும் பகுதியில் குண்டுவீச்சை நிறுத்திவிட்டதாகவும் வட வியட்நாமுடன் சமாதானப் பேச்சு நடத்த தம்முடைய பிரதிநிதிகளை அனுப்பிவைக்கத் தயார் என்றும் அதிபர் ஜான்சன் அறிவித்துள்ளார் வரும் நவம்பர் மாதம் நடைபெற விருக்கும் ஜனதிபதி தேர்தலில் தாம் போட்டியிடப் போவதில்லை என்றும் அதே மூச்சில் அவர் கூறியுள்ளார். அமெரிக்க மக்கள் முன்னர் டெலிவிஷனில் தோன்றி அதிபர் ஜான்சன் இந்த நாடகத்தை ஆடியிருப்பதின் மர்மம் என்ன?**





கம்யூனிஸ்ட் (மார்க்சிஸ்ட்) வார ஏடு

கதிர் 5 | 7-4-68 | 20 காசுகள் | மலர் 29


சமாதான நோக்கத்துக்குத்தான் இந்த நடவடிக்கையை எடுத்திருப்பதாக ஜான்சன் கூறிக் கொண்டாலும் அவர் எந்தச் சமயத்தில் இவ்வாறு செய்திருக்கிருர் என்று பார்த்தால் ஜான்சனின் உண்மை சொரூபத்தை கண்டுகொள்ள முடியும். தேர்தலில் நிற்கப் போவதில்லை என்ற தம்முடையமுடிவு மாற்ற முடியாத முடிவு என்று கூறிக்கொண்டாலும் முழுக்க முழுக்க அரசியல் அரங்கத்திலும் தேர்தல் அரங்கத்திலும் கண் வைத்தே ஜான்சன் இந்த முடிவுக்கு வந்திருக்கிருர் என்பதை கடந்த கால சம்பவங்கள் மெய்ப்பிக்கின்றன'

வியட்நாம் யுத்தத்தை நிறுத்துவதற்கு உண்மையான நோக்கம் இருந்திருக்குமானுல் ஜான்சனுக்கு வாய்ப்புகள் கிட்டாமல் போகவில்லை. வட வியட்நாம் மீது குண்டுவீச்சை நிறுத்தினுல் நிச்சயமாக பேச்சு வார்த்தை மூலம் தீர்வு காண வழியிருப்பதாக இந்திய அரசாங்கமும் மற்ற நாடுகளும் அறிவித்த சந்தர்ப்பங்களில்எல்லாம் ஜான்சன் செவி சாய்க்கமறுத்தார். சிலமாதங்களுக்கு முன்னர் ஐ| நா. பொதுச் செயலாளர் ஊதாண்டே'அமெரிக்கா குண்டுவீச்சைநிறுத்துமானுல் ஒரு வாரம் அல்லது 15 நாட்களில் பேச்சு வார்த்தை நடத்துவதற்கு வடவியட்நாம் சம்மதம் தெரிவிக்கும்'' என்று திட்டவட்டமாக அறிவித்தபோது அதிபர் ஜான்சன் செய்ததென்ன? அந்த வாய்ப்பைப் பயன்படுத்திக்கொள்ள அவர் தயாராக இருந்தாரா? அப்போது குண்டுவீச்சை நிறுத்திவைத்து பேச்சுவார்த்தை நடத்துவதற்கு வாய்ப்பு இருக்கிறதா என்று பார்க்கத்தயாராக இல்லை. இப்போது மட்டும் குண்டுவீச்சை நிறுத்த உத்திரவிட்டிருப்பதாக ஜான்சன் அறிவித்திருக்கிருர் என்ருல் அதற்குக் காரணம் என்ன?

### முயற்சியும் விளைவும்

வியட்நாம் மக்களின் தேசிய எழுச்சியை அடக்க ஓரிரு ஆண்டுகள் அல்ல பத்து ஆண்டுகளாக அமெரிக்கா தன்னுடைய சக்தி அனைத்தையும் திரட்டிப் போராடியது. ஒரு சின்னஞ்சிறு நாட்டில் உலகிலேயே செல்வம் கொழிக்கும் நாடு என்று கூறப்படும் அமெரிக்க ஏகாதிபத்தியம் தன்னுடைய கௌரவத்தையெல்லாம் பணயம் வைத்து போராடிப் பார்த்தும் முடிவில் கண்டதென்ன? வியட்காங் கொரில்லா படைகளைத் தனிமைப்படுத்தி ஒழிக்கவேண்டும் என்ற முயற்சியில் எத்தகைய காட்டுமிராண்டித் தனமான காரியங்களையெல்லாம் அமெரிக்க ஏகாதிபத்திய வாதிகள் செய்தனர்? நாபாம் குண்டுகளைப்போட்டு குடிதண்ணீரையெல்லாம் விஷமாக்கி பயிர் பச்சைகள் யெல்லாம் முளைக்க வொட்டாமல் செய்தனர். ''பாதுகாக்கப்பட்ட கிராமங்கள்'' என்று கூறப்பட்ட சிறைசாலைகளாக தென் வியட்நாம் நாட்டையே மாற்றி மக்களைப் பிரித்து வைத்துப் பார்த்தார்கள்; என்ன என்ன நவீன யுத்த சாதனங்கள் உண்டோ அத்தனையையும் கொண்டு விமானப்படை, கடற்படை ஐந்தேகால் லட்சம் அமெரிக்கத் துருப்புகள் அத்தனையையும் நேரடியாக யுத்தத்தில் ஈடுபடுத்தி எங்கோ ஒளிந்து கொண்டிருப்பதாகக் கருதப்பட்ட வியட்காங் படைகளை ஒழித்துவிடலாம் என்று முயற்சித்தனர். இதன் விளைவு என்ன ஆயிற்று?

எத்தனையோ ஆண்டுகளாக எத்தனையோ நாடுகளைச் சுரண்டிக் கொள்ளையடித்துக் குவித்து வைத்திருந்த பொருளையெல்லாம் வைத்துக் கொண்டு வியட்நாம் யுத்தத்தை நடத்துவதற்காக அமெரிக்க ஏகாதிபத்தியம் கோடிக்கணக்கான டாலர்களைச்செலவு செய்தது இதன் விளைவு என்ன ஆயிற்று? உலகில் எங்கு வேண்டுமானுலும் செல்லுவதற்கான பாஸ்போர்ட்டாக கருதப்பட்ட டாலர்நோட்டே மதிப்பிழந்து சீந்துவாரற்று போய் டாலர் நோட்டு வேண்டாம். தங்கம் கொடு என்றல்லவா உலகெங்கும் கூக்குரல் எழுந்தது? இவ்வாறு அமெரிக்கப் பொருளாதாரத்தையே உலுக்கியிருக்க வேண்டுமானுல் அமெரிக்க ஏகாதிபத்தியவாதிகள் எவ்வளவு முழுமூச்சுடன் யுத்தத்தில் இறங்கியிருக்கவேண்டும்?

### புதிய மாறுதல்

தன் முழுச் சக்தியையும் பயன்படுத்திப் பார்த்தும் வியட்நாம் மக்களை அமெரிக்க ஏகாதிபத்தியவாதிகள் பணிய வைக்க முடிந்ததா என்ருல் பணிய வைப்பது இருக்கட்டும் அமெரிக்கப்படைகளே வியட்நாமில் இனி எத்தனை காலத்துக்குத் தாக்குப்பிடிக்க முடியும் என்ற கேள்வியையல்லவா சமீபத்திய டெட் (புதுவருட) தாக்குதல் எழுப்பிவிட்டது? வியட்காங் படைகளை ஒடுக்கி விட்டதாகவும் மிகுந்த சேதமடைந்த அந்தப்படைகள் இனி தலைதூக்கமுடியாது என்றும் தென் வியட்நாமிலுள்ள அமெரிக்கத் தளபதி வெஸ்ட் மோர்லான்ட் ஜம்பம் அடித்த சமயத்தில் நடந்ததென்ன? கொரில்லா படைகளை தேடிச் சென்று அமெரிக்கப்படைகள் தாக்கிவந்த நிலைமை மாறி அமெரிக்கப் படைகள் தங்கியிருந்த நகரங்கள் அத்தனையிலும் ஒரே சமயத்தில் வியட்காங் படைகள் தாக்குதல் தொடுத்து அழித்துவிடமுடியும் என்பதையல்லவா டெட் தாக்குதல் நிரூபித்துவிட்டது? சென்ற வருடம் வெஸ்ட் மோர்லான்டை ஐசனேவருடன் ஒப்பிட்டு அவரை அமெரிக்க ஜனதிபதி தேர்தலில் குடியரசுக் கட்சியின் வேட்பாளராக நிறுத்தவேண்டும் என்று பேசப்பட்டு வந்த நிலைமை மாறி வெஸ்ட்மோர்லான்டையே தென் வியட்நாமிலிருந்தே திரும்பிவருமாறு அழைக்க வேண்டும் என்று கோரும் சூழ்நிலை அல்லவா ஏற்பட்டுவிட்டது?

வியட்நாம் யுத்தத்தினுல் வாழ்க்கையே சீர்குலைந்துவரும் நிலையில் இதை இன்னும் எத்தனை காலத்துக்கு அமெரிக்க மக்கள் சகித்துக்கொண்டிருக்க முடியும் என்ற கேள்விக்கு அதிபர் ஜான்சன் பதில் கூறவேண்டிய நிலைமை ஏற்பட்டது.

### பலி கடா

தங்களுடைய திட்டங்களை எல்லாம் வியட்நாம் மக்கள் தவிடு பொடியாக்கி விட்டதைக்கண்ட அமெரிக்க ஏகாதிபத்திய வாதிகளுக்கு தங்களுடைய தோல்வியை மறைத்துக்கொள்ள ஒரு பலி ஆட்டையும் தேர்ந்தெடுத்துக் கொள்ள முற்பட்டனர். இந்த நிலையில்தான் ஜான்சன் சீச்சீ இந்தப் பழம் புளிக்கும் என்று பதவியை துறக்க முன் வந்துள்ளார். தண்ணீரில் ஆழ்ந்து கொண்டிருப்பவன் கைக்கு ஏதாவது கிட்டாதா என்று ஆவலுடன் பார்ப்பதுபோல் அமெரிக்க ஏகாதிபத்தியவாதிகள் நம்பிக்கை வைத்திருந்த ஒலியைவிட இருமடங்கு வேகமுள்ள எப் 111 சூப்பர் ஜெட் விமானங்களையும் வடவியட்நாம் படைகள் காக்கைகளை சுட்டுவீழ்த்துவதுபோல் வீழ்த்தியது அதிர்ச்சிக்குமேல் அதிர்ச்சியாக வந்தது.

வியட்நாம் மக்களை சுதந்திரமாக வாழ விட்டுவிட்டு தன் தலையீட்டை நிறுத்திக் கொள்ள அமெரிக்க ஏகாதிபத்தியம் சம்மதிக்குமா? தன்னை உலக'ரட்சகன்'போல் காட்டிக் கொள்ள வேண்டிய நிலையை விடுக்கொடுக்க அது சம்மதிக்குமா? பிற நாடுகளைச் சுரண்டிக் கொழுத்து வந்த நிலைக்குப் பேரிடி விழுவதை அதுஏற்றுகொள்ளுமா? இந்த நிலைக்கு ஆளாகாமல் தப்பித்துக் கொள்ளவே அமெரிக்க ஏகாதிபத்தியம் இறுதி வரை முயற்சிக்கும் என்பது திண்ணம்.

ஜான்சன் அறிவிப்புக்கு ஹனுய் ரேடியோ உடனடியாகப் பதிலளித்திருப்பது— சமாதானப் பேச்சு நடத்துவதற்கு முன்பாக குண்டுவீச்சை நிறுத்துவதுபற்றி ஆராய அமெரிக்கப் பிரதிநிதியுடன் பேச முன் வந்திருப்பது ஜான்சனின் போலித்தனத்தை மேலும் அம்பலப் படுத்தும்.

## 40 ஆயிரம் எல். ஐ. சி. ஊழியர் வேலை நிறுத்தம்

### ஏப்ரல் 5-ல் நடைபெறுகிறது

ஆட்டோமேஷனை எதிர்த்தும் சம்பள விகிதங்களைமாற்ற கோரியும் மற்றும் வீட்டு வசதி மருத்துவவசதி போன்ற கோரிக்கைகளுக்காகவும் நாடெங்கிலும் உள்ள 40 ஆயிரம் ஆயுள்காப்பீட்டு கழக ஊழியர்கள்ஏப் 5ம்தேதிவேலை நிறுத்தம் செய்கிருர்கள்.

ஆட்டோமேஷனை எதிர்த்து இதற்கு முன் மூன்று தடவை வேலை நிறுத்த நடவடிக்கையில் இறங்கியிருந்தபோதிலும் 10 லட்சம் பேர் கையெழுத்திட்ட மகஜரை நாடாளுமன்றத்தில் சமர்ப்பித்துள்ள போதிலும் பம்பாய் எல்.ஐ.சி. அலுவலகத்தில் கணக்குப் போடும் மின்யந்திரத்தை அமைத்திருப்பதுடன் கல்கத்தாவிலும்அதற்கானஆயத்தத்தைச் செய்யப்படுவதையும் கல்கத்தாவில்கூடிய அகில இந்திய இன்ஷூரன்ஸ் ஊழியர் சங்கத்தின் பொதுக் கவுன்சில் பரிசீலித்தது. புதுடெல்லியிலுள்ள ஆட்டோமேஷன் நிலயத்தை உபயோகிக்கவும்பெங்களூரில் ஆட்டோமேஷன் நிலயத்தை அமைக்கவும் ஆலோசனை செய்யப்படுவதையும் அது பரிசீலித்தது. இந்

(8-ம் பக்கம் பார்க்க)

### நன்றி அறிவிப்பு

ராஜ்ய சபைக்கு ஒரு உறுப்பினராக நான் தேர்ந்தெடுக்கப்பட்டதற்கு வாழ்த்துக்கள் அனுப்பியுள்ள தோழர்களுககும் நண்பர்களுக்கும் என் உளமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்ளுகிறேன்.

—எம். ஆர். வெங்கட்ராமன்

தீக்கதிர்

## சென்னை நிகழ்ச்சிகளும்

## காங்கிரசின் கபட நாடகமும்

சென்னையில் நடந்த வருந்தத்தக்க நிகழ்ச்சிகளுக்குப் பிறகு காங்கிரசார் தங்கள் சுயரூபத்தைக் காட்டிக்கொண்டு வருகிறார்கள். காமராசரும், பக்தவத்சலனாரும் ஏனைய காங்கிரஸ்காரர்களும், காங்கிரஸ் ஏடுகளும் ''இந்து'' ''மெயில்'' ''தினமணி'' ''மித்திரன்'' போன்ற முதலாளிகளின் ஏடுகளும் இன்று ஒரு கட்டுப்பாடான பிரச்சாரத்தில் இறங்கியுள்ளார்கள்.

இவர்களனைவரும் ஒருமித்த குரலில் தமிழ்நாட்டில் சட்டம், அமைதி, குலைந்துவிட்டதென்று கூப்பாடுபோடுகிறார்கள். மாணவர்களின் நண்பர்கள்போல் ஒரு புறத்தில் நடிக்கிறார்கள். மாணவர்களிடத்தில் அரசியல் வாதிகள் தலையிடக் கூடாதென்று பேசிய காமராசரும் அவரது கட்சியினரும் மாவட்டம், மாவட்டமாகச் சென்று காங்கிரஸ் தேசீய மாணவர்களை ஒன்றுகூட்டி இந்த அரசாங்கத்தை எதிர்ப்பதற்கு மாணவர்கள் இனிமேல் கலவரம் செய்யவேண்டுமென்று கோரி வருகிறார்கள்.

சட்டசபை எதிர்க்கட்சி தலைவர் திரு. கருத்திருமன், விக்டோரியா மாணவர் விடுதிக்குச் சென்று, மாணவர்கள் இனிமேல் போர்க் கோலம் பூணவேண்டுமென்று கோரியதாகவும் தகவல் வந்துள்ளது. இந்தி எதிர்ப்பு இயக்கத்தின் போது நூற்றுக்கணக்கான மாணவர்களின் உயிரைக்குடித்த இந்த மாணவ விரோதிகள் இன்று மாணவர்களது நண்பர்கள்போல் நடிக்க முன்வந்துள்ளார்கள். மானவெட்கமில்லாமல் பச்சையாக மாணவர்களின் ஒரு பகுதியை, சென்னை நிகழ்ச்சிகளைப் பயன்படுத்தி மாநில அரசிற்கெதிராக கலகம் செய்யும்படி தூண்ட முன்வந்துள்ளனர்.

நீதிவிசாரணைக்கு அரசாங்கம் உத்தரவிட்டிருக்கும் பொழுது இது கூடாது. பகிரங்க விசாரணை வேண்டுமென்கிறார் காமராசர். இன்றைய அமைப்பில் நீதிவிசாரணைக்கும், பகிரங்க விசாரணைக்கும் என்ன வித்தியாசமென்று நமக்குத் தெரியவில்லை. இன்றுள்ள அரைகுறை ஜனநாயக அமைப்பில் இந்த அளவிலாவது விசாரணை நடத்த தமிழக அரசு முன் வந்திருக்கும்பொழுது, உண்மையைப் புலப்படுத்துவதில் இந்த காங்கிரஸ்காரர்களுக்கு அக்கறை இருக்குமானால் இந்த விசாரணையில் ஒத்துழைத்திருப்பார்கள். ஆனால் அவர்களுக்கு நீதிவிசாரணை நடப்பதே விருப்பமானதல்லவே!

பக்தவதசலம் கூறுகிறார்: ''கோடிக்கணக்கில் பெரும் பணத்தை மக்களுடைய பாதுகாப்புக்காகச் செலவழிக்கிறோம்... குழந்தைகளுக்கு தன் தாயிடத்தில் இருக்கும் அச்சம் போலீசாரிடத்தில் மக்களுக்கு இருக்கவேண்டும்'' என்று பக்தவத்சலம் எவ்வாறு போலீஸ் நடக்க வேண்டுமென்பது குறித்து விளக்கம் கூறியுள்ளார்

பக்தவத்சலம் பேசிவருவதின் சுருக்கம் என்னவெனில் போலீசார் துப்பாக்கிச்சூடு நடத்தினால் அதனைப் பகிரங்க விசாரணை செய்யக்கூடாது! போலீசாரைக் கண்டால் மக்களுக்கு அச்சம் இருக்கவேண்டும். ஏதாவது ஒரு சிறு சம்பவம் நடந்தாலும், கண்ணீர் புகை, தடியடியல்ல, நேரடியாக சண்டித்தனமான துப்பாக்கிப் பிரயோகம் செய்வதைக் கொள்கையாகக் கொள்ளவேண்டும் இதுதான் காமராசர், பக்தவத்சலம் தமிழக அரசிடம் வற்புறுத்தும் கொள்கை. இத்தகைய கொள்கையை தமிழக அரசு பின்பற்றத் தயங்குவதனாலேயே அதாவது சென்னையில் ஏற்பட்ட நிகழ்ச்சியைப் போன்ற நேரங்களில் நூறு அல்லது இருநூறு பேரை கொல்லக்கூடிய விதத்தில் போலீஸ் இலாக்காவை நடத்திச் செல்லத் தயங்கிய காரணததாலேயே சென்னையில் சட்டமும் அமைதியையும் நிலைநாட்டப் படவில்லை என்று பக்தவத்சலம் அங்கலாய்க்கிறார்.

சென்ற 20 வருஷகாலமாக இதே கொள்கையைப் பின்பற்றித்தானே தொழிலாளர்களையும், விவசாயிகளையும் பொது மக்களையும் சுட்டுக்கொன்று ஒரு போலீஸ் ஆட்சியை காங்கிரஸ் அரசு நடத்தி வந்தது? அதனால்தானே காங்கிரசை இந்நாட்டு மக்கள் வெறுத்து பதவியிலிருந்து ஓடஓட விரட்டினார்கள்!

இத்தகையதொரு ஜனவிரோத அடக்குமுறைக் கொள்கையை புதிய தமிழக அரசு பின்பற்றுமானால் நிச்சயமாக காங்கிரசுக்கு ஏற்பட்ட கேட்ட பெயர் தி.மு.க. அரசுக்கும் சீக்கிரமே ஏற்படுமல்லவா? அத்தகைய சூழ்நிலை இந்த மாநிலத்தில் காங்கிரசுக்கு மீண்டும் புத்துயிரளிக்க உதவி செய்யுமல்லவா? அதனால்தான் போலீசார் என்றால் மக்களுக்கு ''அச்சம் இருக்கக்கூடிய விதத்தில் அவர்கள் நடந்துகொள்ளவேண்டுமென்று அறிவுரை கூற முன்வந்திருக்கிறார் பக்தவத்சலம்!

தமிழகத்தில் இன்று ஒரு பாசிஸ்ட் ஆட்சி நடப்பதாக காங்கிரஸ்காரர்கள் தொண்டை கிழிய கத்துகிறார்கள். சென்ற 20 ஆண்டு காலத்தில் காங்கிரஸ் நடத்திய போலீஸ் ஆட்சியின் மிச்சசொச்சமாக இன்றைக்கும் போலீசாரின் நடைமுறையில் பல கோளாறுகள் உள்ளன; நடைமுறையில் மக்கள் விரோதப் போக்குகளுள்ளன; தொழிலாளி விரோதப் போக்குகளுள்ளன; ஆனால் பக்தவத்சலம் விரும்புவது இத்தகைய மக்கள் விரோதப் போக்குகளை தமிழக அரசு மாற்றவேண்டுமென்பதல்ல: மாறாக தாங்கள் நடத்திய போலீஸ் ஆட்சியைப் போன்றே இவர்களும் நடத்தவில்லையே என்பதினால்தான் இவர்களுக்குக் கோபம்.

காமராசர் ஆட்சி காலத்திலேயோ, அல்லது பக்தவத்சலம் காலத்திலேயோ, அதற்கு முன்போ எத்தனையோ தடியடிப் பிரயோகங்கள் நடந்துள்ளன. ஒரு நீதிவிசாரணை நடந்ததுண்டா? சேலம் சிறையில் 22 கம்யூனிஸ்டுகளை சிறைக்குள் பூட்டிவைத்து சுட்டுக்கொன்றார்களே, இதே நரவெறி பிடித்த காங்கிரஸ் காரர்கள்! வேலூர் சிறையில் துப்பாக்கிப் பிரயோகம்! கடலூர் சிறையில் துப்பாக்கிப் பிரயோகம் நடத்தி கம்யூனிஸ்டு கைதிகளைச் சுட்டுக்கொன்ற பேடித்தனமான செயல்களில் ஈடுபட்ட காங்கிரஸ்காரர்கள் இன்று பாசிஸ்ட் ஆட்சி நடக்கிறதென்று கூறுவது விந்தையிலும் விந்தை!

1947-ல் அரசாங்க அதிகாரம் காங்கிரஸார் கையில் கொடுக்கப்பட்ட அந்த நாளிலிருந்தே பொன்மலையில் தொழிலாளிகள்மீது, தஞ்சையில் விவசாயிகள்மீது, கோவையில் மில் தொழிலாளிகள் மீது, மதுரை, நெல்லையில், ராமனதபுரத்தில் ஒவ்வொரு மாவட்டத்திலும் தொழிலாளர்களையும் விவசாயிகளையும், பொதுமக்களையும், கம்யூனிஸ்டுகளையும், ஏனைய மாற்றுக் கட்சியினரையும் சுட்டுக் கொன்ற கூட்டம் இந்தக் காட்டுமிராண்டிக் கூட்டம். இரணியன், சிவராமன் ஆறுமுகம், ராசு, மாரி, மணவாளன், தில்லைவனம், போன்ற அருமைத் தோழர்களை கட்டிவைத்துச் சுட்டுக்கொன்ற கயவர்கள் கூட்டம் இந்தக் கூட்டம். களப்பால் குப்புவை விஷங் கொடுத்து கொன்றது இந்த காங்கிரஸ் கூட்டம். சின்னியம்பாளையம் வீரர்களையும், மதுரை பாலுவையும் தூக்கிலிட்டுக் கொன்றது இந்த வெறிக்கூட்டம். அன்னை லக்ஷ்மியையும், அக்னீஸ்மேரியையும், ஜி. வி. சுப்பையாவையும் சிறையில் வைத்துக் கொன்றது இந்தக் காங்கிரஸ் கூட்டம்.

சமீபத்தில் இந்தி எதிர்ப்பு இயக்கத்தின்போது மாணவர்களை நரவேட்டையாடியதை இன்னும் யாரும் மறந்திருக்க மாட்டார்கள்.

இத்தகைய பாசிஸ்ட் வெறி பிடித்த மனிதவிரோதிகள், முதலாளிகளையும், நிலப்பிரபுக்களையும் பாதுகாப்பதற்காகச் சென்ற 20 ஆண்டு காலத்தில் வெறிபிடித்து அலைந்த இந்த பாசிஸ்ட் கூட்டம் தமிழகத்தில் தோன்றியுள்ள ஒரு மாற்றாட்சியை பாசிஸ்ட் ஆட்சி என்று துணிந்து கூறமுன்வந்துள்ளது.

மாற்றரசுகளை ஒன்றன் பின் ஒன்றாக கவிழ்க்கத் திட்டமிட்டு செயல்பட்டு வரும் காங்கிரஸ் கட்சி சென்னையில் நடந்த ஒரு துரதிருஷ்டமான நிகழ்ச்சியின் மூலம் தமிழகத்தில் மாற்றரசை கவிழ்க்கலாமென்று திட்டமிட்டு செயல்படுகிறது ஜனநாயக ஆர்வமுள்ள எதிர்கட்சிகள், தொழிலாளிகள், விவசாயிகள், மாணவர்கள் ஆகியோர் இந்த தீய முயற்சியை முறியடிக்கவேண்டும். நீதி விசாரணை நடத்தி, இந்த சம்பவத்தில் பாதிக்கப்பட்ட அனைவருக்கும் நீதி கிடைக்கப் போராடுவோம்: ஆனால் அதே நேரத்தில் காங்கிரஸ்காரர்களின் சதிச் செயல்களுக்கு ஒருநாளும் இடங்கொடுக்கக் கூடாதென்று எச்சரிக்கிறோம்.

# மில் முதலாளிகளின் சதி உடைகிறது!

## முத்தரப்பு மாநாட்டில் தோழர் பூபதி எம்.எல்.ஏ. அறைகூவல்

தென்னிந்திய மில் முதலாளிகள் பல மில்களை மூடப் போவதாக மிரட்டினார்கள் அல்லவா? நஷ்டம் வருகிறது. நூல் தேங்கிவிட்டது என்று நொண்டிக்காரணங்களைக்கூறிகொண்டு மிரட்டல் வேலைகளில் இறங்கினார்கள் அல்லவா? உண்மையான காரணங்களைக் கண்டுபிடித்து பிரச்னைகளுக்குத் தீர்வு காண்பதற்கு மார்ச் 28, 29 தேதிகளில் தமிழக முதலமைச்சர் முதலாளிகள், தொழிலாளர்களின் பிரதிநிதிகளை அழைத்திருந்தார். முதலாளிகள் சங்கத்தின் சார்பில் சி. ஜி. ரெட்டி, கருமுத்து தியாகராஜ செட்டியாரின் மகன், கதிரிபங்கஜா முதலாளி ராமசாமி நாயுடு, காளேஸ்வரா, சோமசுந்தரா உரிமையாளர்கள் ஆகியோர்வந்திருந்தனர்.

தொழிலாளர்கள் சார்பில் ஏ. ஐ. டி. யு. சி சங்கங்களைச் சேர்ந்த எம். பூபதி எம்.எல்.ஏ கே. எம். சுந்தரம், ஆறுமுக முதலியார் ஆகியோரும் எச். எம். எஸ் சார்பில் ஏ. சுப்பிரமணியம், குமாரசாமி, எம்.எல்.ஏ, ஐ. என். டி. யு. சி சார்பில் சுப்பையாவும் தி.மு.க சார்பில் காட்டூர் கோபால், துரைசாமியும் தமிழக தொழிலாளர் சங்கம் சார்பில் என். மருதாசலமும், ஐக்கியதொழிலாளர் சங்கம் சார்பில் பி. எஸ். சின்னதுரையும் வந்திருந்தனர்.

இக்கூட்டத்தில் முதலமைச்சருடன் கல்வியமைச்சரும் ஏனைய பல அதிகாரிகளும் கலந்துகொண்டனர்.

### முதலாளிகள் வாதம்

முதலாளிகள் கூறிய வாதம் பின்வருமாறு :

53 ஆயிரம் பேலுக்கு மேல் நூல் தேக்கம். இதனால் பணமுடக்கம் ஏற்பட்டுள்ளது. இந்த நிலைமைக்கு காரணம் தொழிலாளிகள் அல்ல. மக்களிடையே வாங்கும் சக்தி இல்லாததுதான் காரணம் என்று பேசினர். எதற்காக இந்தவாதத்தைக் கிளப்பினார்கள் என்பது அவர்கள் அடுத்து முன்வைத்த கோரிக்கையிலிருந்து அம்பலமாயிற்று. விசைதறிகளை அனுமதிக்கவேண்டும். வேற்று மாநிலங்களிலிருந்து சரக்கு இறக்குமதியைத் தடுக்கவேண்டும். எக்சைஸ் வரியை ரத்து செய்யவேண்டும். தங்களிடத்தில் தேங்கியிருக்கும் ஸ்டாக்குகளை அரசாங்கம் வாங்கிக் கொள்ள வேண்டும். மாநில அரசாங்கம் விற்பனை வரியைக் குறைக்க வேண்டும். மின்சாரக் கட்டணத்தைக் குறைக்கவேண்டும். பிராவிடண்ட் பண்டு, ஈ.எஸ்.ஐ. திட்டம் ஆகியவற்றை வற்புறுத்தக்கூடாது. முதலாளிகள்மீதான பளுவைக் குறைக்க வேண்டும். இத்தனையையும் செய்தால் மில்களை மூடாமல் பார்த்துக் கொள்ளுகிறோம் என்றார்கள் முதலாளிகள்.

### பூபதி எம்.எல்.ஏ சவால்

இத்தனை சலுகைகளையும் உங்களுக்குக் கொடுப்பதற்குப் பதிலாக நாங்களே மில்களை எடுத்து நடத்தலாமே என்று முதலமைச்சர் கேட்டார். முதலாளிகள் பதில் கூறவில்லை.

ஐக்கிய தொழிற்சங்கத்தின் தலைவரான திரு சின்னத்துரை முதலாளிகளுக்கு நஷ்டம் வருவது உண்மைதான். ஆகவே தொழிலாளர்கள் அதிகம் உழைப்பது அவசியமாகிறது

(3-ம் பக்கம் பார்க்க)

# கூட்டுறவு ஸ்தாபனங்களில் ஊழல்கள் மிகுவதேன்?

## உடனடி நடவடிக்கை எடுக்க

## சட்ட மன்றத்தில் தோழர் சி. கோவிந்தராஜன் கோரிக்கை

கூட்டுறவு மானியக்கோரிக்கையை விவாதிக்கும்போது அதன் நோக்கங்களை நினைவில் கொள்ளவேண்டும். ஒவ்வொருவரும் அனைவருக்காகவும் அனைவரும் ஒவ்வொருவருக்காகவும் என்ற அடிப்படையில் செயல்படும் இயக்கம் இது. ஏழை எளியவர்களுக்காகவே குறிப்பாக கிராமப் புறத்தில் வாழக் கூடிய விவசாயிகளுக்காகவே ஏற்படுத்தப்பட்ட இயக்கம் இது. மூலதனத்தைப் போட முடியாத விவசாயிகளை தங்கள் ஒத்துழைப்பின் மூலமாகவும் அரசினர் உதவியின் மூலமாகவும் சில காரியங்களைச் செய்வதற்கு ஏற்படுத்தப்பட்ட ஸ்தாபனம் இது. அந்த நோக்கத்தின் அடிப்படையில் அது இயங்குகிறதா என்றால் அப்படியில்லை என்றே எனக்கு முன் பேசிய உறுப்பினர்கள் அனைவரும் கருத்துத் தெரிவித்தனர்.

மூலதனத்தைப் போட முடியாதவர்களுக்காக ஏற்படுத்தப்பட்ட ஸ்தாபனம் பெரிய ஆதிக்கக்காரர்கள் கையில் சிக்கிக் கொண்டிருப்பதையும் அவர்களுக்குத் தேவையானதை அடைகின்ற ஒரு கருவியாக அது மாறியிருப்பதையும் நாம் பார்க்கமுடிகிறது. ஆகவே நம்முடைய அரசு சட்டத்தின் அடிப்படையிலாவது அல்லது சட்டத்தைத் தீவிரமாக அமுலாக்கக்கூடிய அடிப்படையிலாவது நடவடிக்கைகளை எடுக்கவேண்டும் என்று கேட்டுக் கொள்ளுகிறேன்.

### ரூ. 24 ஆயிரம் ஏப்பம்

பல்வேறு ஆதிக்கக்காரர்கள் வருவதின் காரணமாகத்தான் கூட்டுறவு ஸ்தாபனங்களில் பல ஊழல்கள் நடைபெறுகின்றன. குறிப்பாக என்னுடைய தொகுதியைச் சேர்ந்த சில கூட்டுறவு சங்கங்களில் இருக்கக்கூடிய சில நிலைமைகளை இந்த மாமன்றத்தின் முன்னால் நான் கொண்டுவருகிறேன். என் தொகுதியில் குயிலா பாளையம் பால் சொசைட்டி என்ற ஒரு சொசைட்டி இருக்கிறது. அச்சங்கங்கத்தின் தலைவர் பல பேருடைய பெயரில் பொய் கையெழுத்துப் போட்டு ரூ. 24 ஆயிரத்துக்குமேல் கடன் வாங்கி யிருப்பதாகப் புகார் வந்திருக்கிறது. இந்த 24 ஆயிரத்தை பெற்றதாக 24 பேருக்கு நோட்டீஸ் போகும்போது அவர்கள் அரசாங்கத்துக்குப் புகார் மனு அனுப்பினார்கள். அந்தச் சொசைட்டியின் தலைவர் கிட்டத்தட்ட 10 ஆண்டு காலமாக பல்வேறு சொசைட்டிகளுக்குத் தலைவராக இருக்கக் கூடியவர் "என்பேரில் எப்படி நடவடிக்கை எடுக்கிறார்கள் பார்க்கிறேன்" என்று அவர் பேசிக் கொண்டிருக்கிறார்.

அந்தப் பால் சொசைட்டியின் ஊழல்கள் போலீசால் கண்டுபிடிக்கப்பட்டு நடவடிக்கை எடுக்கப்பட்ட நேரத்தில் மில்க் கமிஷனர் தலையிட்டு இது பால் சொசைட்டி ஆகவே தொடர்ந்து நடவடிக்கை எடுக்க வேண்டாம் என்று கூறியிருக்கிறார். பாதிக்கப் பட்டவர்களும் நானும் முதலமைச்சரைச் சந்தித்துப் பேசினோம். பிறகு போலீஸ் இன்ஸ்பெக்டர் ஜெனரலை நான் சந்தித்துப் பேசினேன். இதற்குப் பிறகும்கூட எவ்வித நடவடிக்கையும் எடுக்கப்படவில்லை. இதை ஏன் குறிப்பிடுகிறேன் என்றால் கடலூரில் இருக்கும் பில்டிங்சொசைட்டி பல்வேறு பெயர்களில் வில்வராய நகர், சுப்பராய நகர், சூசை நகர் என்றெல்லாம் இடங்களை வாங்கி மராமத்து செய்வது ரோடு போடுவது போன்ற வேலைகளுக்கு லட்சக் கணக்கான ரூபாய் செலவழிக்கப் பட்டிருக்கிறது. கிட்டத்தட்ட ரூ. ஒன்றரை லட்சம் வரையில் கணக்குக் காட்ட முடியாதசூழ்நிலை இருக்கிறது. இந்த பில்டிங் சொசைட்டியின் தலைவராக உள்ள இதே நபர்தான் இதுமாதிரி மில்க் சொசைட்டிகளிலும் கடன் சொசைட்டிகளிலும் ஊழல்களைச் செய்கிறார். இதனால் கூட்டுறவு இயக்கத்தின் பேரிலேயே அந்தப் பகுதிமக்கள் நம்பிக்கையை இழக்கக்கூடிய சூழ்நிலை எற்பட்டிருக்கிறது.

### கையெழுத்திட்டவர்கள் திண்டாட்டம்

இன்னொரு விதமான வேலைகளும்நடக்கின்றன. தென்னாற்காடு மாவட்ட கூட்டுறவு மத்திய பாங்கின் தலைவராக இருந்தவர், காங்கிரஸ் தலைவராக மாநில மட்டத்தில் அறிமுகமானவர் இப்போது அவர் உயிருடன் இல்லை பல நபர்களிடம் கையெழுத்து வாங்கி ரூ. 6 லட்சத்துக்கு மேல் மத்திய பாங்கிலிருந்து கடன் பெறப் பட்டுள்ளது. திடீரென்று அவர் இறந்துவிட்டார். இப்பொழுதுரூ. 6 லட்சத்துக்கு கையெழுத்துப் போட்ட நபர்கள் ரூபாய் அறுபதாயிரம் முப்பதாயிரம் என்று கையெழுத்துப் போட்டவர்கள் இன்றைக்குக் கஷ்டப்பட்டுக் கொண்டிருக்கிறார்கள். இதற்கெல்லாம் பரிகாரம் என்ன? ஆடிட் என்று கூறப்படுகிறது. இது பற்றி என்னுடைய அபிப்பிராயம் என்னவென்றால் இலாகாவில் இருக்கக்கூடிய ஏஜென்சி ஆடிட்டரே தணிக்கை செய்வதற்குப் பதிலாக மாநில ஆடிட்டர் ஜெனரலின் கீழ் இருக்கக்கூடிய ஆடிட்டர்கள் தணிக்கை செய்தால் நலமாக இருக்கும்.



மற்றும் கூட்டுறவு இலாகாவில் கால தாமதம் ஏற்படக் கூடிய பல காரியங்கள் நடக்கின்றன. ஸ்கூட்டர்ஸ் அன்டு அலைட்வெஹிகில்ஸ் கூட்டுறவு சொசைட்டி ஒன்று ஆரம்பிக்க 1967 மே 9ம்தேதி மனு வந்தும் இன்று வரை அதைப் பதிவு பண்ண ஏற்பாடு செய்யப்படவில்லை.

நெய்வேலி கூட்டுறவு பண்டகசாலை இன்று மூடப்படக் கூடிய சூழ்நிலை இருக்கிறது. இதனால் இருநூறு முந்நூறு தொழிலாளிகள் வேலை இழப்பதுடன் ஒரு லட்சம் மக்கள் நியாயமான விலைக்கு சாமான் வாங்க முடியாத நிலைமை ஏற்படும்.

என்னூரில் ஈ. ஐ. டிபாரி கம்பெனியில் கூட்டுறவு கான்டீன் சரியான முறையில் நடத்தப்படவில்லை. கவர்ன்மெண்ட் பிரசிலுள்ள கான்டீனும் சரியான முறையில் நடத்தப்பட வில்லை. இப்படிப்பட்ட நிலைமைகளுக்கெல்லாம் பரிகாரம் காண வேண்டுமானால் ஊழல்களை உடனுக்குடன் விசாரித்து சம்பந்தப்பட்டவர்கள்மீது நடவடிக்கை எடுத்துக் கொள்ள வேண்டும்.

---

### நன்கொடை

மதுராந்தகத்தைச் சேர்ந்த தோழர் செழியன் அவர்களின் ஆண் மகவுக்கு குவேரா என்று பெயர் வைத்ததன் நினைவாக தீக்கதிருக்கு நன்கொடை ரூ. 3 அனுப்பியுள்ளார்.

---

(2-ம் பக்கத் தொடர்ச்சி)

முதலாளிகளுக்கு மாநில அரசு அதிகப்பணம் வழங்கவேண்டும் என்று மில் முதலாளிகளுக்காக வக்காலத்து வாங்கிப் பேசினார்.

ஏ.ஐ.டி.யு.சி சங்கங்கள் சார்பில் தோழர் பூபதி எம்.எல்.ஏ பேசுகையில் முதலாளிகளின் வாதங்களைத் தவிடுபொடியாக்கினார். 1965-ம் வருடத்தில் 84 ஆயிரம் பேல் நூல் தேங்கியிருந்த காலத்தில் முதலாளிகள் மில்களை மூடவில்லை. ஆனால் இன்று ஏன் மூடமுயலுகிறார்கள் என்றால் லாபம் அறவே இல்லாத காரணத்தால் அல்ல. அவர்கள் அடைந்த கொள்ளை லாபம் சிறிது குறைந்துள்ளது. அதைக் கூட்டிக் கொள்வதற்காக இந்தச்சதி என்று அம்பலப்படுத்தினார். அடுத்தபடி இரண்டாவது சம்பளப் போர்டு நியமித்து அதன் சம்பள விகிதங்கள் வர இருக்கின்றன. சம்பளப்போர்டு சிபார்சுகளை முறியடிக்க இந்தப் பல்லவி என்றார்.

முதலாளிக்கு லாபம் இல்லை என்று கூறுவது தவறு. லாபமில்லை என்றால் ஒரு மில்லைக் கட்டிய முதலாளி பிறகு இரண்டுமூன்று மில்களைக் கட்ட எப்படி முடியும்? இன்று முதலாளிகள் தங்கள் லாபத்தை பல்வேறு தொழில்களில் போட்டுள்ளார்கள் என்பதை இங்கு வந்துள்ளவர்கள் மறுக்க முடியுமா என்று வினவினார்.

தொழிலாளிகளுக்கு குறைவான போனஸ் கொடுப்பதற்காக லாபத்தைக் குறைத்துக் காட்டும் தவறான பாலன்ஸ்ஷீட் தயாரித்தார்கள். நான்கேட்கிறேன். இப்போதாகிலும் சர்க்கார் தன்னுடைய ஆடிட்டரை நியமிக்கட்டும். அந்த ஆடிட்டர் ஒவ்வொரு மில்லையும் பரிசீலனை செய்ய இங்குள்ள மில் முதலாளிகள் தயாராக இருக்கிறார்களா என்று வினவினார். இந்த நேரடி சவாலுக்கு கூடியிருந்த எந்த முதலாளியும் பதில் சொல்லவில்லை. மேலும் பூபதி பேசுகையில் மில் முதலாளிகள் தங்களுடைய லாபத்தைக் கொண்டு புதிய தொழில்களை ஆரம்பித்திருப்பதைக் கொண்டே-அந்த விவரங்களையெல்லாம் வைத்திருக்கிறேன்- இவர்கள் கொடுத்திருக்கக் கூடிய கணக்கு பொய் என்பது நிரூபணமாகிறது என்றார்.

தோழர்கள் கே. ரமணி, ஆர். உமாநாத், கே. ஏ. நம்பியார், கந்தப்பன், செழியன், நாராயணன் ஆகிய மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட், தி. மு.க எம். பிகள் சமீபத்தில் வர்த்தக அமைச்சர் தினேஷ் சிங்கைக் கண்டு பேசிய பொழுது அவர் தென்னிந்தியாவில் மில்களை மூடும் அளவுக்கு எத்தகைய விசேஷ நிலைமையும் ஏற்பட்டுவிட வில்லை என்றும் இன்று சர்க்கார் விலைக் கட்டுப்பாடு 45 சதவிகிதம் துணிக்கு உள்ளதை 10 அல்லது 15 சதவிகிதமாகக் குறைப்பதற்காகவும் சுங்கவரி போன்ற வரிகளைக் குறைக்க சலுகை பெறுவதற்காகவும் இத்தகைய மூடுவிழா நடவடிக்கையில் ஈடுபடுவதாகவும் தெரியவந்தது. எனவே தென்னிந்திய மில் முதலாளிகள் மில்களை மூடவேண்டிய அவசியமில்லை. அப்படி மில்களை மூட முன்வந்தால் அவர்கள் கோரும் சலுகைகளை அளித்து நஷ்டம் அடைவதற்குப்பதில் அரசாங்கமே மில்களை ஏற்று நடத்தலாம் என்று பூபதி மேலும் கூறினார்.

இந்தக் கருத்தை கே. எம் சுந்தரம் எச். எம். எஸ்ஸை சேர்ந்த சுப்பிரமணியம் ஆதரித்தனர்.

### முதலமைச்சர் பதில்

இறுதியாக பேசிய முதலமைச்சர் திரு அண்ணாதுரை அவர்கள் மில் முதலாளிகள் கோரும் சலுகைகளைக் கொடுப்பதைவிட தமிழக அரசே நடத்திப்பார்த்தால் என்ன என்ற கருத்தை வைத்ததுடன் அவ்விதமே முயற்சிப்பதாகவும் கூறினார். அதுவரையில் எந்த மில்லையும் மூடக்கூடாது என்றும் கேட்டுக் கொண்டார். இது குறித்து சீக்கிரமாக அறிக்கை வெளியிடுவதாகவும் கூறினார். இந்த வாக்குறுதியின்படி இறுதி நாளன்று சட்டசபையில் பேசிய முதலமைச்சர் மூடுவதற்காக இருந்த எந்தெந்த மில்களை அரசாங்கம் எடுத்துக் கொள்ளலாம் என்பதை டாக்டர் லோகநாதன் அவர்களைப் பரிசீலனை செய்து கூறும்படி கேட்டிருப்பதாகவும் அவரது ஆலோசனை வந்தபின் சம்பந்தப்பட்ட மில்களுக்கு நோட்டீஸ் கொடுக்கப்போவதாகவும் அறிவித்தார்.

இவ்வாறு தொழிலாளர் ஒற்றுமையாலும் தொடர்ந்த போராட்டத்தினாலும் முதலாளிகளின் புதிய சதியும் தற்காலிகமாக முறியடிக்கப்பட்டது. எனினும் பிரச்னை இத்துடன் தீர்ந்துவிடவில்லை. தொழிலாளரின் தொடர்ந்த ஒன்றுபட்ட இயக்கமே முதலமைச்சர் தந்த வாக்குறுதியை நிறைவேற்றவும் முதலாளிகள் சதியை முறியடிக்கவும் உறுதுணையாக இருக்கும்.

---

### தாராபுரம் கூட்டுறவு மில்லில் மறியல் போராட்டம்

கோவை மாவட்ட கூட்டுறவு மில் நிர்வாகம் 21-3-68 முதல் கதவடைப்புச் செய்து 450 தொழிலாளர்கள் குடும்பங்களைப் பட்டினி போட்டிருப்பதை எதிர்த்து தொழிலாளர்கள் ஒன்றுபட்டு லேபர் யூனியன் வழி காட்டுதலின் கீழ் போராடி வருகிறார்கள் மில் தொழிலாளருக்கு அனுதாபம் தெரிவிக்கும் முறையில் 30-3-68 ல் மாணவர்களும், வியாபாரிகளும் ஒரு நாள் ஹர்த்தால் அனுஷ்டித்தனர். போராட்டத்தின் அடுத்த கட்டமாக நாள்தோறும் 10 பேர் வீதம் மறியல் போராட்டம் நடத்தவும் தீர்மானிக்கப்பட்டுள்ளது.

---

### அறையூரில் தியாகி பக்கிரி மன்ற திறப்பு விழா

பாபநாசம் தாலுகா அறையூரில் பக்கிரி மன்ற திறப்பு விழா 19-3-68 ல் நடைபெற்றது. ஈ. ஜி. ராஜு தலைமை வகித்தார். பி. தங்கராஜு மன்றத்தைத் திறந்து வைத்தார்.

# ஒன்றுபட வேண்டிய சக்திகள் பிளவுபடுவதா?

# சீர்குலைவு சதிகாரர்களை முறியடிப்போம்!

மார்ச் 27 காலை நேரம். சென்னை எல்லை அருகில் ஒரு சிறு குடிசையின் முன் அமைக்கப்பட்ட பந்தலில் ஒரு பழைய கட்டிலில் சென்னை அரசுப் போக்குவரத்து தொழிலாளி உம்மரின் சடலம் வைக்கப்பட்டிருக்கிறது. துயரத்தின் உருவமாக கர்ப்பிணியான அவரின் இளம் மனைவி அழுது அழுது கண்கள் வீங்கி, குழந்தைகளுடன் தன் கணவரின் பாதத்தருகே அமர்ந்திருக்கிறார். ஆயிரக்கணக்கான தொழிலாளிகள் கலங்கிய கண்களுடன், நீண்ட வரிசைகளில் தங்களுடைய அன்புத் தோழனுக்கு இறுதி மரியாதையை செலுத்தி செல்கிறார்கள்.

மார்ச் 25ந் தேதி மாலை வண்டியை ஓட்டிச்சென்ற உமருக்கு இந்த நிலை ஏற்படுமென்று யாரும் எதிர்பார்த்திருக்க மாட்டார்கள். 25ந் தேதி இரவு போக்குவரத்து டைரக்டரும், போலீஸ் கமிஷனரும் வேண்டிக்கொண்ட தற்கிணங்க பஸ்ஸை ஓட்டிவரச் சென்றார் அவர். சட்டக் கல்லூரி விடுதியருகே சில மாணவர்களால் தாக்கப்பட்டு உயிரிழந்தார்.

தோழர் உமரின் சடலத்தை பார்க்கும்போது மாணவர்களுக்கும், தொழிலாளர்களுக்குமிடையே இத்தகைய கசப்புணர்ச்சி ஏற்பட்டது குறித்து நான் கவலைப்பட்டேன். ஓராயிரம் எண்ணங்கள் என் மூளையில் ஓடிமறைந்து கொண்டேயிருந்தன. போக்குவரத்தில் உள்ள இடநெருக்கடியின் காரணமாக தொழிலாளர்களுக்கும், பயணிகளுக்கும் அடிக்கடி சச்சரவு ஏற்படுகின்றது. நிர்வாகத்தின் திறமையின்மையும், அரசின் புறக்கணிப்புமே இதற்கு காரணம். அதற்காக உழைப்பாளி ஒருவர் பலியாவதா?

## நிர்வாகமே பொறுப்பு

அண்மையில் உரிமைகளை கேட்டு அரசு மறுத்த காரணத்தால் தொழிலாளர்கள் வேலை நிறுத்த நோட்டீஸ் கொடுத்திருந்தார்கள். எல்லா மாநிலத்திலும் அரசாங்கப் போக்குவரத்து தொழிலாளர்களுக்கு போனஸ் உண்டு. ஆனால் இங்கே மட்டும் அது மறுக்கப்பட்டிருக்கிறது நஷ்டம் என்று காரணம் கூறுகிறார்கள். தேய்மான நிதி என்றும், அபிவிருத்தி நிதி என்றும் கோடிக்கணக்கில் வருமானத்திலிருந்து ஒதுக்கிவைப்பதில் ஒன்றும் பஞ்சமில்லை. ஆனால் உழைக்கின்ற தொழிலாளிக்கு மட்டும் நியாயம் வழங்கப்படவில்லை. தமிழக அரசு போக்குவரத்துத்தொழிலாளர்கள் இந்தக் கோரிக்கைகளுக்காக போராடி தியாகம் புரிய நேர்ந்தால் அது தொழிலாளிகளின இயக்கத்திறகே சிறப்பும், பெருமையும் அளிக்கும். ஆனால், எந்த ஜனநாயகவாதியும் விரும்பத்தகாத நிகழ்ச்சிகள் துரதிருஷ்டவசமாக ஏற்பட்டுவிட்டன. மாணவர்களின் கசப்புணர்ச்சிகளைப் பயன்படுத்தி அரசியல் லாபம்தேட காங்கிரஸ் கட்சியும், அதன் ஏடுகளும் இந்த நிகழ்ச்சிகளை பூதாகரமாக சித்தரித்து, செயல் படுகிறார்கள். ஜனாதிபதி ஆட்சி வேண்டுமாம்! தொழிலாளர்கள் அராஜகத்தை தூண்டுகிறார்களாம்; சட்டமும் அமைதியும் குலைந்துவிட்டதாம்! எனவே இந்த ஆட்சி நீக்கப்படவேண்டுமாம்! தவிர்க்கப்படவேண்டிய தவறான உணர்ச்சிகளை மேலும் தூண்டிவிட்டு உண்மைகளைத் திருத்திக்கூறி அரசியல் லாபம் பெற காங்கிரஸ் கட்சியும் அதன் தலைவர் காமராசரும் கங்கணம் கட்டி களத்திலிறங்கியிருக்கிறார்கள். கோட்டைக்குச் சென்று முறையிட்ட தொழிலாளிகளிடம் வருத்தத்தை தெரிவித்த அமைச்சர் கருணாநிதியின் நடத்தை ஒரு அரசுக்கு உகந்ததல்ல என்று காமராசர் பேசியிருக்கிறார்! தொழிலாளர்களிடம் அமைச்சர் வருத்தம்தெரிவிக்கலாமா? அரசு என்றால் துப்பாக்கியால் தானே தொழிலாளர்களிடம் பதில் கூறவேண்டும் என்பது தானே அதன் பொருள்?

## காங்கிரசின் நீலிக்கண்ணீர்

மாணவர்களிடமும் தொழிலாளர்களிடமும் ஏற்பட்ட விரும்பத்தகாத கசப்புணர்ச்சியைப் போக்க எந்த நடவடிக்கையும் எடுக்க அவர்கள் விரும்பவில்லை. மாணவர்களின் பாதுகாவலர்களாக அவர்கள் முதலைக் கண்ணீர் வடிக்கிறார்கள். இந்த அரசியல் சதியை மாணவர்கள் பார்க்கவேண்டும். காங்கிரஸ் அரசு தமிழ் மொழியைப் புறக்கணித்து ஹிந்தித் திணிப்பில் ஈடுபட்ட பொழுது தமிழகமே பாராட்டும் முறையில் வீறு கொண்டெழுந்த மாணவர்களை எவ்வாறு நடத்தினார்கள் என்பது நாடே அறியும். குருவியைச் சுடும் முறையில் இளம் மாணவர்களை தெருக்களிலே சுட்டுக்கொன்று ரத்த வெள்ளத்திலே மிதக்கச் செய்து கும்மாளமடித்தது இதே காங்கிரஸ் கட்சி. மாணவர்களை இவ்வாறு செய்யலாமா என்று பக்தவத்சலம் இன்று கேள்வி எழுப்புகிறார்! அன்று போராடிய மாணவர்களுக்கு பக்கபலமாக தொழிலாளர்கள் நின்றார்கள். பலர் மாணவர்களுடன் வழக்குகளில சம்பந்தப்படுத்தப்பட்டார்கள். இது அனைத்தையும் மாணவர்கள் மறந்துவிடமுடியாது.

## நகரசுத்தி தொழிலாளர் போராட்டம்

தொழிலாளர் இயக்கத்திற்கும் மாணவர்இயக்கத்திற்கும் கடந்த காலத்தில் இருந்த நட்பும், தோழமையும் என் நினைவிற்கு வந்தது. அன்னிய ஆட்சிக்கெதிராக இந்த சென்னை நகரத்தில் மாணவர்களும், தொழிலாளர்களும் இணைந்து நடத்திய பல்வேறு போராட்டங்கள் என் நினைவிற்கு வந்தது. 1944 முதல் 1946 வரை பிரிட்டிஷ் ஆட்சிக்கெதிராக நாடுமுழுவதிலும் நடைபெற்ற போராட்டத்தில் சென்னை நகரத்தில் அன்று தொழிலாளர்களும், மாணவர்களும் இணைந்து நின்று நடத்திய பேரணிகளும், வீரமிக்க போராட்டங்களும் வரலாற்று மாணவர்கள் மறக்க



முடியாது. சென்னை நகரசுத்தி தொழிலாளர்கள் உரிமைக்காகப் போராடியபொழுது நடைபெற்ற தடியடி பிரயோகத்தில் சைதாப்பேட்டையைச் சேர்ந்த ஒரு பெண் தொழிலாளி பலியானார். அந்த அம்மையாரின் சடலத்தைத் தாங்கி, 144 தடையுத்தரவை மீறி மாணவர்களும் தொழிலாளர்களும் கொடியபோலீஸ் படையை எதிர்த்து நடத்திய வீரமிக்க போராட்டம் எனது நினைவிற்கு வந்தது. எங்களை விசேஷ போலீஸ் படையினால் கொடுமையாகத் தாக்கி படுகாயப்படுத்தியபொழுது அந்த ரத்தத்தில் தோய்த்தெடுத்த உடைகளை கொடிகளாக ஆக்கி பிரகாசம் ஆட்சியை எதிர்த்து கோட்டைக்கு முன் ஸ்டான்லி மருத்துவக் கல்லூரி மாணவர்களும், சென்னை சட்டக் கல்லூரி மாணவர்களும் நடத்தியஆர்ப்பாட்டம் இன்னும் என் நினைவில் பசுமையாக உள்ளது.

## கடற்படை போராட்டம்

பம்பாய் துறைமுகத்தில் பிரிட்டிஷ் கொடியை இறக்கி காங்கிரஸ்-லீக்-கம்யூனிஸ்ட் கொடிகளை ஏற்றி உலகறிய வெள்ளையனின் ஆட்சிக்கெதிராக கலவரம் பிரகடனம் செய்த வீர மாலுமிகளைதாக்க பிரிட்டிஷ் படைகள் அனுப்பப்பட்டபொழுது பம்பாய் தொழிலாளர்கள பொது வேலை நிறுத்தம் செய்து அந்த துருப்புகளை எதிர்த்து பம்பாய் தெருக்களிலே போராடினர். அவர்களுக்காதரவாகசென்னை நகரத்தில் மாணவர்களும், தொழிலாளர்களும் ஒருங்கிணைந்து பொது வேலை நிறுத்தமும் ஹர்த்தாலும் நடத்தினர். சென்னை நகரத்தின் வரலாறு கண்ட மிகப்பெரிய ஹர்த்தாலும், அணிவகுப்பும் அன்று தொழிலாளர்கள்-மாணவர்கள் தலைமையில் நடைபெற்றது. மருத்துவக் கல்லூரி மாணவிகள் உள்பட அந்த போராட்டத்தில் சிறப்பாக பங்கெடுத்தனர், பிரிட்டிஷ் ஆட்சியே சரிந்தது.

## ஐ.என்.ஏ. வீரர்களுக்காக

1946ம் ஆண்டு பிப்ரவரி மாதம் பிரிட்டிஷ் ஆட்சிக்கெதிராக சென்னை நகரத்தில் நடைபெற்ற ஹர்த்தாலின்போது அன்று சென்னை உயர்நீதி மன்ற நீதிபதியாக இருந்த பயர்ஸ், தெருவிலே ஒரு சிறு பாலகனை சுட்டுக்கொன்றதைத் தொடர்ந்த ''பயர்ஸை தூக்கிலிடு'' என்று மாணவர்கள் வெளியிட்ட துண்டுப் பிரசுரம் என் நினைவிற்கு வந்தது.

**வி. பி. சிந்தன்**

இந்திய தேசீய ராணுவ வீரர்களைப் பழிவாங்காதே என்று சென்னை சட்டக் கல்லூரி மாணவர்களும் மருத்துவக் கல்லூரி, பொறியியல் கல்லூரி, பச்சையப்பன் கல்லூரி மாணவர்களும் ஆரம்பித்த ஊர்வலத்தைமௌண்ட் ரோடில் போலீஸ் தடை செய்தபொழுது மாணவர்களும், தொழிலாளர்களும் இணைந்துநின்று போலீசை முறியடித்து வெற்றிகரமாக இயக்கத்தை முன்நடத்திச் சென்றனர். இதைப்போல இன்னும் எத்தனை, எத்தனையோ வீரப் போராட்டங்கள் சென்னை நகரத்தின் தெருக்களிலே நடைபெற்றதையும் அவற்றில் மாணவர்களும் தொழிலாளர்களும் தோளோடு தோள் சேர்ந்து நின்று போராடிய காட்சிகளும் என் நினைவிற்கு வந்தது.

## தீயசக்திகளை ஒழித்து கட்டுவீர்

ஆனால் இன்று நாம் என்ன பார்க்கிறோம்? நாட்டை சீர்குலைக்கும்பெருமுதலாளிகளின் கட்சியான காங்கிரசிற்கு எதிராக, இணைந்துநிற்கவேண்டிய மாணவர்களும், தொழிலாளர்களும் பகைமையுடன் இருக்கும் வருந்தத்தக்க நிலைமையைத்தான் காண்கிறோம். சென்ற பொதுத்தேர்தலில், காங்கிரசை முறியடித்த ஜனநாயக சக்திகளை அடக்கவும், காங்கிரசல்லாத ஆட்சிகளை கவிழ்க்கவும் தினசரி சதித்திட்டம் தீட்டிவரும் காங்கிரஸ் கட்சியையும் அதன் டெல்லிப் பேரரசையும் சவால்விட்டு போர் புரிய கடமைப்பட்டவர்கள் இன்று தங்களுக்குள்ளேயே ஏற்பட்டுள்ள பூசல்களை பெரிதுபடுத்திப் பார்க்கும்நிலை ஏற்பட்டுள்ளது காங்கிரஸ் கட்சியின் இந்தச் சதிக்கு மாணவர்களும், தொழிலாளர்களும் இடமளிக்கக்கூடாது.

20 ஆண்டு காங்கிரஸ்ஆட்சி வேலை இல்லாத் திண்டாட்டத்தை வளர்த்துள்ளது. பொறியியல் கல்லூரியிலும், கலைக்கல்லூரிகளிலும படித்துப்பட்டம் பெற்றவர்கள் வேலையின்றி தெருக்களிலே அலைகிறார்கள்; இன்றுள்ள மாணவர்களும் இதே கொடுமையைத்தானே நாளை சந்திக்க வேண்டும்? இந்தக் கொடுமையை உருவாக்கிய காங்கிரசை ஒழிக்க உறுதியாக நிற்கும் தொழிலாளி வர்க்கத்துடன் இணைந்து நிற்பதில் தானே மாணவர்களின் எதிர்கால வாழ்வு அடங்கியுள்ளது?

★

## குமரி மாவட்டத்தில் அனுதாப வேலை நிறுத்தம்

27-3-68 இரவு 10-30 மணிக்கு நாகர் கோவில் அரசு பஸ் தொழிலாளர் பொதுக் கூட்டம் தோழர் டி.எஸ். ராமசாமி தலைமையில் நடைபெற்றது. சென்னையில் நடைபெற்ற நிகழ்ச்சிகள் காரணமாக தோழர் சையது உமர் உயிர் நீத்ததற்கு அனுதாபம் தெரிவித்து 8 மணி நேரம் வேலை நிறுத்தம் செய்வது என தீர்மானித்து அன்று இரவு 12 மணிமுதல் 28ம் தேதி காலை 8 மணிவரை வேலை நிறுத்தம் நடைபெற்றது. துரித பஸ்கள் உட்பட உள்ளூர்—வெளியூர் பஸ்கள் அனைத்தும் 8 மணிவரை புறப்படவில்லை. இரண்டாயிரத்திற்கு மேற்பட்ட தொழிலாளர்கள் கறுப்பு பாட்ஜ்கள் அணிந்து, நாகர் கோவில், குழித்துறை பஸ் நிலையங்கள் முன்னால் அமர்ந்திருந்தனர்.

28ம் தேதி காலை 8 மணிக்கு தோழர் எம் எம். அலி சொற்பொழி வாற்றினார்.

தோழர் சையத் உமர் குடும்பத்திற்கு நிதி வசூலிக்க முடிவு செய்யப்பட்டு வசூல் நடைபெற்று வருகிறது.

வசூலாகும் நிதியை இம்மாதம் இறுதியில் சென்னை வந்து சையது உமர் குடும்பத்திற்கு கொடுக்கப்படும்.

## மதுரை, திருச்சி, கோவை

மார்ச் 27ந் தேதி காலை சையது உமரின் மரணத்திற்கு அனுதாபம் தெரிவித்து அரசாங்க பஸ்கள் ஓடவில்லை. ஊழியர்கள் கருப்பு பேட்ஜ்கள அணிந்து ஊர்வலம் வந்தனர்.

# பூந்தாழங்குடி வழக்கை வாபஸ் பெறுக!

# தமிழகமெங்கும் விவசாயப் பெருங்குடி

தமிழ் நாடு விவசாயிகள் சங்கத்தின் அறை கூவலுக்கேற்ப மார்ச் 24 முதல் 31 வரை தமிழகமெங்கும் கோரிக்கைவாரம் அனுஷ்டிக்கப்பட்டது. இந்த வாரம் முழுதிலும் விவசாயிகள் விவசாயத் தொழிலாளர்களின் கிளர்ச்சிப் பிரசாரங்களும் அணிவகுப்புகளும் ஊர்வலங்களும் மாபெரும் பொதுக்கூட்டங்களும் நடைபெற்றுள்ளன. "பூந்தாழங்குடி வழக்கை வாபஸ் வாங்கு" குத்தகை வார சாகுபடியாளருக்கு பாதுகாப்பு அளிக்கும் விரிவான சட்டத்தை கொண்டுவா, விளைச்சலின் 75 சதம் பங்கு வேண்டும், விவசாயத் தொழிலாளிக்கு மனைக்கட்டு வழங்குக. உச்ச வரம்புச்சட்டம் குடும்பத்திற்கன்றி நபருக்கல்ல முதலிய கோரிக்கைகளை விவசாயத் தொழிலாளர்கள் எழுப்பியுள்ளனர்.

கீழ்க்கண்ட இடங்களில் நடைபெற்ற விவசாயப் பெருங்குடி மக்களின் அணிவகுப்புகளில் நிறைவேற்ற பெற்ற தீர்மானங்கள் முதலமைச்சருக்கு அனுப்பி வைக்கப்பட்டுள்ளன. தஞ்சை மாவட்டத்தைச் சேர்ந்த சேங்காலிபுரம், தென்பாரைபுதூர், நமச்சிவாயபுரம், ஒருவளிக்குடி, கண்டரமாணிக்கம் இருள் நீக்கி, புள்ளமங்கலம் பாலையூர், ஏத்தக்குடி, தென்பாதி, கீழமணலி, கருப்பூர் பூந்தாழங்குடி, பேரையூர், சழகொண்டான், ராமாநுஜமணலி, ஊட்டியாளி, சித்திரையூர், கமுகத்தூர், தலையாமங்கலம், அத்திகோட்டை, கீழவளத்தான் சேரி, அரிச்சபுரம், ராஜப்பையன் சாவடி, கார்ச்சாங்குடி, வைய களத்தூர், 141 நெம்மேலி, நீடாமங்கலம், திருக்களார், வடகண்டம், திருக்கண்ண மங்கை புது தேவங்குடி, களப்பாள், கானூர், கருவாக்குறிச்சி, வாண்டையார் குடிக்காடு, சோத்திரியம், தேவங்குடி, பரவாக்கோட்டை, மன்னார்குடி, ராதா நரசிம்மபுரம், கருவளச்சேரி, பிலாவடி, கொத்தங்குடி, பூசாலாங்குடி, குன்னியூர், ராதா நல்லூர், ஆத்தூர், கருக்கங்குடி, நமசிவாயபுரம் ஆகிய ஊர்களிலும் மற்றும் பல மாவட்டங்களைச் சேர்ந்த பல ஊர்களிலிலும் விவசாயப் பெருங்குடி மக்களின் அணிவகுப்புகளில் தீர்மானங்கள் நிறைவேற்றபட்டு முதலமைச்சருக்கு அனுப்பி வைக்கப்பட்டுள்ளது.

நாகபட்டினம், சில்லமரத்துப்பட்டி, கீழ்வேலூர், மேட்டூர், விஜயபுரம் திருபூண்டி, மன்னார்குடி, விஜயபுரம், நீடாமங்கலம் முதலிய பல இடங்களிலிருந்து பூந்தாழங்குடி வழக்கை வாபஸ் பெற கோரி முதலமைச்சருக்குத் தந்திகள் பறந்துள்ளன.

(முழு விவரங்கள் பின்னர் வெளியாகும்).

## சேலம் மாவட்டத்தில் கோரிக்கை வாரம்

சேலம் மாவட்டத்தில் தமிழ்நாடு விவசாயிகள் சங்க கோரிக்கை வாரப் பொதுக் கூட்டங்கள் மார்ச்சு 24 முதல் 31 வரையில் நடைபெறறது.

மேட்டூர் தாலுக்காவில் 24-3—68ல் மாலை 7 மணிக்கு புதுரெட்டியூர் மாரியம்மன் கோவில் மைதானத்தில் தோழர் கருப்பண்ணக் கவுண்டர் தலைமையில் பொதுக்கூட்டம் நடைபெற்றது. தோழர்கள் வி. இராமசாமி, எம். சீரங்கன், கே. ஏ. அங்கப்பன் மற்றும் பலர் பேசினார்கள்.

25-3-68 மாலை 7 மணிக்கு மல்லப்பனூர் மாரியம்மன் கோயில் மைதானத்தில் எம். சந்தப்பன் அவர்கள் தலைமையில் விருதாசலபட்டி வி. ச. சங்க சார்பில் பொதுக்கூட்டம் நடைபெற்றது. பழங்கோட்டையில் இருந்து ஊர்வலம் புறபட்டு கூத்தனூர், விருதாசலம்பட்டி வழியாக மல்லப்பனூர் வந்துசேர்ந்தது. கூட்டத்தில் தோழர்கள் கே. எஸ். அர்த்தனாரி (செயலாளர், மாவட்ட கமிட்டி) வி. இராமசாமி, எல். அமரப்பன், கே. பெருமாள், எஸ். பெருமாள் கருப்பண்ணன் ஆகியவர்கள் பேசினார்கள்.

29—3—68ல் மாலை 7 மணிக்கு மேட்டூரில் தோழர் எஸ். இராமசாமி அவர்கள் தலைமையில் பொதுக்கூட்டம் நடைபெற்றது. தோழர்கள் கே.எஸ். அர்த்தனாரி (செயலாளர்.மாவட்டக்கமிட்டி) கே.ஏ. அங்கப்பன், குமரிராஜன், எம். இராமு ஆகியோர்கள் இக்கூட்டத்தில் கலந்துகொண்டு பேசினார்கள்.

31—3—68ல் மேட்டூர் தாலுக்கா வி. ச. சங்க சார்பில், புதுசாம்பள்ளி மாரியம்மன் கோவில் மைதானத்தில் கடைசி நாள் கூட்டம் நடைபெற்றது. தோழர்கள் கே. எஸ். அர்த்தனாரி (மாவட்ட வி ச. செயலாளர்) தலைமையில் நடந்தது. பழங்கோட்டையில் இருந்து ஊர்வலம் புறப்பட்டு குஞ்சாண்டியூர் வழியாக புதுசாம்பள்ளியை வந்து அடைந்தது தோழர்கள் வி இராமசாமி, கே. சி. அழகப்பன், ஆர். சடையன், எல். அமரப்பன், கே. ஏ. அங்கப்பன், சி. கோபால் மற்றும் பல தோழர்களும் பேசினார்கள்.

சேலம் தாலுக்கா பொன்னரப்பட்டியில் 24—3—68ல் மாலை 7 மணிக்கு தோழர் பெரியசாமி தலைமையில் பொதுக்கூட்டம் நடைபெற்றது, குறவன், குறத்தி, குதிரை ஆட்டம் போன்றவற்றுடன் ஊர்வலம் ஒன்று வந்தடைந்தது. தோழர்கள் கே. எஸ். அர்த்தனாரி, வி. இராமசாமி, எல். கந்தசாமி, ஆர். எல். அந்தோணிசாமி, ஆர். கருப்பண்ணன் ஆகியோர் கூட்டத்தில் கலந்து கொண்டார்கள் பகல் 2 மணிக்கு விவசாய ஊழியர்கள் கூட்டம் நடைபெற்றது. மாவட்ட வி. ச சங்கச் செயலாளர் கலந்து கொண்டார்.

திருச்செங்கோடு தாலுக்காவில் 27—3—68ல் மாலை 7 மணிக்கு வெள்ளியம் பாளைய வி. ச. சங்க சார்பின் பொதுக்கூட்டம் நடைபெற்றது தோழர்கள் வி. இராமசாமி, எச். எம். முஸ்தபா, வி. கே. கந்தசாமி, பழனியப்பன் ஆகியோர் பேசினர்.

கூடாது, 6-7 நெம்பர் நோட்டீஸ்கள் வாபஸ் செய்ய வேண்டும் ஆகிய கோரிக்கைகளும் மாவட்ட கிசான் சங்கம் முன்வைத்தது.

25-ம் தேதி: 25-3-68 காலை கூடலூரில் நின்றும்பாதயாத்திரைக் குழுவினர் புறப்பட்டனர். துறைப்பன்னி நம்பாளக்கோடு, பாடந்தறை ஆகிய இடங்களில் வரவேற்புகள், பாடந்தறை பொதுக் கூட்டமும் நடந்தன.

### ஊரெங்கும் வரவேற்பு

26ம் தேதி பாடந்தறையிலிருந்தும் புறப்பட்ட ஜதைக்கு வழி நெடுக வரவேற்புகளும் நடந்தது.

முடித்துக்கொண்டு பந்தல்லூர்க்கு வருகை தந்தனர்.

### கண்கொள்ளா காட்சி

பந்தல்லூர் வரவேற்பும் பொதுக்கூட்டமும் முடித்துக்கொண்டு மாலையில் தேவாலா பொதுகூட்டத்தையும் நடத்திவிட்டு, இறுதி நாளாகிய 31ம் தேதி பாதயாத்திரைக் குழுவினர் கூடலூரை நோக்கி புறப்படலாயினர்; பகல் 1 மணிக்கு லட்சியஸ்தானத்தை அடைந்தனர்! மார்ச் மாத வெயில், சகிக்கமுடியாத சூடு, வேர்வை கொட்டுகின்றது—எனினும் கூடலூர் நகரம் புரட்சிக்கனலைதான் கண்டது. பொதுக் கூட்டத்தில் கலந்து

# மக்களின் அணிவகுப்பு!

சங்ககிரி தாலுக்கா, இடப்பாடி அருகில் மலங்காட்டில் 28—3—68 மாலை 7 மணிக்கு வி. ச. சங்க சார்பில் பொதுக் கூட்டம் நடைபெற்றது. தோழர் பரமசிவன் தலைமை வகித்தார் தோழர்கள் கே. எஸ். அர்த்தனாரி, வி. இராமசாமி, நல்லதம்பி ஆகியோர்கள் பேசினார்கள்.

மேற்கண்ட 7 கூட்டங்களும் சிறப்பாக நடந்து முடிந்

முதிரக் கொல்லியிலும், பாட்டவயலிலும் பொதுக் கூட்டங்கள் நடைபெற்றன. 27ம் தேதி பாட்டவயலிலிருந்து புறப்பட்ட பாதயாத்திரைக் குழுவினருக்கு பந்தப்பளாவு எனுமிடத்தில் விவசாயிகள் உற்சாகமிக்க வரவேற்பு மாபெரும் பொதுக் கூட்டத்தில் ஆயிரக்கணக்கில் விவசாயிகள் கலந்துகொண்டனர்; குழுவினருக்கு நோட்டு மாலைகளும் மலர் மாலைகளும்

கொள்ள வந்திருக்கின்ற மக்கள் பெருங்கடல் கூட்டு ஆர்ப்பாட்டத்தில் கலந்துக்கொள்ள நீலகிரி மாவட்டத்தில் எல்லா பகுதிகளிலிருந்தும் வருகை தந்துள்ள தொண்டர் படை செங்கொடியேந்தி, வானமதிர கோஷமிட்டு நிற்கின்ற காட்சி; நகரமெங்கும் செங்கொடிகள், பானர்கள்; நகர மையத்தில் அழகே, அழகு என அமைக்கப்பட்டுள்ள "கிருஷ்ணப் பிள்ளை நகர்"!

# பல்லாயிரக்கணக்கில் திரண்டு உரிமை முழக்கம்!

தது. கூட்டம் நடந்து முடிந்த பின் "பூந்தாழங் குடிவழக்கை வாபஸ்பெற கோரி தந்திகள் தமிழக முதல் அமைச்சர் அவர்களுக்கும், நகல் என. சங்கரைய்யா, த. வி. ச. சங்கச் செயலாளர் அவர்களுக்கும் அனுப்பி வைக்கப்பட்டுள்ளது.

## நீலகிரி மாவட்டத்தில் பாத யாத்திரை

தமிழ் நாடு விவசாயிகள் சங்கத்தின் வேண்டுகோளுக்கிணங்க நீலகிரி மாவட்டத்தில் கோரிக்கை வாரம் மிக சிறப்பாக கொண்டாடியது. மாவட்ட விவசாயிகள் சங்க செயலாளர் தோழர் பி.கிருஷ்ணன் குட்டியின் தலைமையில் ஏழு தோழர்கள் 2 ம் தேதி முதல் கூடலூரில் இருந்துபாதயாத்திரையாக புறப்பட்டனர். தமிழக விவசயிகள் சங்கம் மு வைத்த கோரிக்கைகளுடன் சாகுபடி செய்து வருகின்ற விவசாயிகளை நில வெளியேற்றம் செய்யக்

அன்பளிப்பாக வழங்கினர்! 28ம் தேதி உப்பட்டியிலிருந்து குழுவினர் புறப்பட்டு அய்யங்கொல்லி வழியாக காரக்கொல்லி வந்தடைவதற்கு முன்னாலேயே அங்கு விவசாயிகள் அணியணியாக திரண்டு வானமதிர கோஷங்களுடன் வரவேற்றனர். அன்று 5 மணிக்கு எருமாட்டை அடைந்த குழுவினருக்கு அங்கே வரவேற்பளிக்கப்பட்டனர். மாபெரும் பொதுக் கூட்டமொன்றும் நடைபெற்றது 29ம் தேதி எருமாட்டிலிருந்து குழுவினர் புறப்பட்டு சேராப்பாடி வரவேற்பு-பொதுக்கூட்டம், இவைகளில் கலந்துகொண்டனர். 30ம் தேதி பந்தல்லூர் ஆம், கதிரவன் புன்முறுவலுடன் உதயமாவதற்கு முன்னேயே கோட்டத் தொழிலாளர்கள் அணியணியாக அங்கே கூடி நின்றனர்! ஆவலுடன் எதிர்பார்த்துக் கொண்டிருந்தனர்!! 30ம் தேதி காலை சேராம் பாடியிலிருந்து புறப்படும் பாதயாத்திரைக் குழுவினர் சேராங்கோடுவரவேற்பை

மாபெரும் ஆர்ப்பாட்டத்திற்கு பின் பொதுக்கூட்டம் நடத்தப்பட்டது. பொதுக் கூட்டத்தில் பாதயாத்திரை குழுவினராகிய தோழர்கள் பி கிருஷ்ணன் குட்டி (காப்டன்), சி.பி. பாஸ்கரன், கே.ஜி. சுந்தரம், கே எல். எலியாஸ், கே ஐ. செரியான், பிஎம். ஜோசப், பி.வி. மொய்தீன் ஆகியோரை கூட்டத்திற்கு அறிமுகப்படுத்தினர்.

பொதுக் கூட்டத்திற்கு டி.பி. கலமாட்சன் தலைமை தாங்கினார். தோழர்கள் ந... பீசன் (நிலம்பூர்) கே.எ... குட்டன், ஜே. பெள்ளா கவுடர் ஆகியோர் பேசினார்கள். பொதுக்கூட்டத்திற்குப் பின் பிரபல இசைக்குவினர் பந்தல்லூர் பரமேஸ்வரன் குழுவினரின் கதாகலாட்சேபமும் நடைபெற்றது.

பாதயாத்திரைக் குழுவினருக்கு பாட்டவயல், பந்தப்ளாவு, உப்பட்டி, சேராம்பாடி முதிரக் கொல்லி பந்தல்லூர் ஆகிய இடங்களில் நோட்டு மாலைகள் அணிவிக்கப்பட்டன

(8-ம் பக்கம் பார்க்க)

# பஞ்சாலைத் தொழிலில் நஷ்டம் என்பது உண்மையா?

## ஆடிட்டரை நியமித்து பரிசீலனை செய்ய

## சட்டமன்றத்தில் தோழர் பூபதி கோரிக்கை

தமிழக சட்ட மன்றத்தில் மார்ச் 22-ம் தேதி தொழில் மான்யக் கோரிக்கை மீது தோழர் எம். பூபதி நிகழ்த்திய பேச்சு :

தொழில்கள், தொழில் முன்னேற்றம் பற்றி மான்யக் கோரிக்கைகள் மூலம் ரூ. 12-25 கோடி கோரப்பட்டுள்ளது.

இன்றைய தினம் கைநெசவுத் தொழிலாளர் பல்வேறு இடங்களில் வேலை வாய்ப்புக் கிடைக்காத நிலையில் இருந்து கொண்டிருக்கின்றனர். எப்படி, 1963-ம் வருடத்தில் கைநெசவுத் தொழிலாளர்கள் ஸ்ரீவில்லிபுத்தூரிலிருந்து கால் நடை யாத்திரை தொடங்கினார்களோ அந்த நிலை தற்போது உருவாகி வருகிறது. சென்னை சைதாப்பேட்டையில் வேலை செய்கிற ஆறாயிரத்துக்கு மேற்பட்ட கைத்தறி நெசவுத் தொழிலாளர்களுக்கு வேலை இல்லாத நிலை ஏற்பட்டு பாதிக்கப்பட்டிருக்கக் கூடிய நிலை ஏற்பட்டிருக்கிறது. ஒரு பக்கத்தில் பஞ்சாலைத் தொழிலாளர் பாதிக்கப்பட்டிருக்கிறார்கள். கடந்த இரண்டு ஆண்டு காலமாக பஞ்சாலைகளை மூடிக் கொண்டிருக்கிற நிலை வளர்ந்து வருகிறது. குறிப்பாக பஞ்சாலை முதலாளிகள் நூல் தேக்கம் அதிகமாகி விட்டது, பஞ்சாலைகளை மூட வேண்டும் என்று பகீரதப் பிரயத்தனம் செய்கிறார்கள். அவர்கள் தொழிலாளர்களுக்கு ஒரு யோசனை கூறுகிறார்கள். "உங்கள் ஓய்வு லீவை எடுத்துக் கொள்ளுங்கள். பணம்கிடைக்கும் நஷ்டம் ஏற்படாது" என்று. அவர்களுடைய காரியத்தை முடிக்கப் பார்க்கிறார்கள். இதைப் பற்றி அமைச்சர் நன்கு சிந்திக்க வேண்டும். உண்மையில் அவர்களுக்கு பெரிய அளவில் நஷ்டம் ஏற்பட்டு விடவில்லை. பஞ்சாலை முதலாளிகள் நஷ்டம் என்று சொன்ன காரணத்தால் அவர்களுடைய பாலன்ஸ்ஷீட் பலவற்றை நாங்கள் பரிசீலனை செய்து போனஸ் கொடுக்க வேண்டும் என்பதற்காக கோர்ட்டில் தாவா செய்வதற்கு வேண்டிய நடவடிக்கைகளை எடுத்துக் கொண்டிருக்கிறோம். ஆகவே அரசு தனியாக ஒரு ஆடிட்டரை நியமித்து அவற்றை பரிசீலனை செய்வது உதவிகரமாக இருக்கும். குறிப்பாகச் சொல்ல வேண்டுமென்றால் இ. ஐ. டி. பாரி கம்பெனியைப் பற்றி 20–ம் தேதி எக்ஸ்பிரஸ் பத்திரிகையில் வந்திருக்கிறது. அதில் எச். வி ஆர். ஐயங்கார் "சரித்திரம் காணாத அளவுக்கு அதிக லாபம் கிடைத்திருக்கிறது" என்று கூறுகிறார். ஒரு பக்கத்தில் இந்த நிலை இருக்கும் போது மற்றொரு பக்கத்தில் நஷ்டம் ஏற்படுகிறது என்று கூறுகிறார்கள். பஞ்சாலைகளில் நஷ்டம் ஏற்படுகிறது என்று சொல்வது உண்மையிலேயே எந்த அளவுக்கு என்று பரிசீலனை செய்ய வேண்டும். பரிசீலனை செய்து



ஏற்பட்டிருக்கும் நோய்க்குத் தக்கபடி மருந்து கொடுக்க வேண்டும்.

### சேலம் உருக்காலை பிரச்னை

மத்திய சர்க்கார் நமக்கு போதுமான உதவி செய்யவில்லை. செய்வதில்லை என்பது எல்லோருக்கும் தெரியும். சேலம் உருக்காலையை அமைக்க வேண்டும் என்பதற்காக பல்வேறு நடவடிக்கைகள் எடுக்கும் போது அதற்கு காங்கிரஸ் உறுப்பினர்கள் உறுதுணையாக இருக்க வேண்டும். அன்றைய தினம் சேலம் உருக்காலை நிறுவப்பட வேண்டும் என்று உரிமை தினம் எல்லோரும் கொண்டாடினோம். ஆனால் இன்னும் அதற்கு மத்திய சர்க்கார் எந்தவிதப் பதிலையும் கூறவில்லை. அந்த சேலம் உருக்காலைத் தொழில் நம்முடைய நாட்டில் உருவாவதன் மூலமாக உபதொழில்கள் உருவாக முடியும். அதன் மூலம் வேலை வாய்ப்புகள் பெருக முடியும். ஆகவே மத்திய சர்க்காரைமேலும் வற்புறுத்தி அந்தத் திட்டத்தை மேற்கொள்ள வேண்டும். அதற்காக இன்றைக்கு வெளி நாடுகளில் இருந்து உதவிகளைப் பெற முயற்சிக்கலாம் என்றால் அமெரிக்கா, பிரிட்டன் போன்ற நாடுகளில் டாலர் நெருக்கடியும் ஸ்டர்லிங் நெருக்கடியும் ஏற்பட்டிருக்கிறது. சோஷலிச நாடுகளை அணுகினால் நல்ல முறையில் உதவி புரியும். குறிப்பாக கிழக்கு ஜெர்மனியை அணுகுவதன் மூலம் நாம் பலன் பெற முடியும். நம்முடைய நாட்டில் எப்படி நெய்வேலி நிலக்கரியும் சேலம் இரும்பும் அருகருகே கிடைக்கக் கூடிய நிலை இருக்கிறதோ அதே போன்ற நிலையில் அங்கே பல்வேறு உருக்காலைகளை வைத்து நடத்தி வருகிறார்கள். அப்படி அவர்களை அணுகுவதற்கு மத்திய சர்க்காரை வற்புறுத்த வேண்டும். அதற்கு எல்லா அரசியல் கட்சிகளும் ஒன்று சேர்ந்து வற்புறுத்த வேண்டும்.

கேரள சர்க்கார் கூட இது போன்று மத்திய சர்க்காரிடம் ஒரு உதவியைக் கோரிய போது மத்திய சர்க்கார் உதவி செய்திருக்கிறார்கள்.

### எங்கே கோளாறு

சர்க்கார் நடத்துகிற பல்வேறு சிறு தொழில்கள் நிலைமையைப்பற்றி பேசிய எங்கள் கட்சித் தலைவர் தோழர் பால சுப்பிரமணியம் தெளிவாகவும் விளக்கமாகவும் எடுத்துச் சொல்லியிருக்கிறார்இம்மாதிரி தொழில்களில் எல்லாம் எந்த அளவுக்கு அதிகமாக அதிகாரிகள் நிறைந்திருக்கிறார்கள் என்பதைப் புள்ளி விவரத்தோடு கூறினார். கடந்தகால காங்கிரஸ் ஆட்சி அதிகாரிகளை நம்பிய காரணத்தால் தான் பல்வேறு தொழில்களில் நஷ்டம் ஏற்பட்டது. பல்வேறு தொழில்களுக்கு லட்சக்கணக்கான ரூபாய் கடனாகவும் மான்யமாகவும் கொடுக்கப்பட்டும் அவர்கள் செய்தது என்ன?

பாரத் சேவக் சமாஜ் கடன் பெற்றது 90 ஆயிரம் கிரான்ட் 1 லட்சத்து 23 ஆயிரம். ஐயாயிரம் ஹோல்டால்கள் செய்வதாகவும் ஒவ்வொன்றும் ரூ. 18-25க்கு விற்பனை செய்வதாகவும் ஒப்புக் கொள்ளப்பட்டது. ஆனால் இறுதியாக உற்பத்தி செய்தது 1872. விற்றது 816. விலை ரூ. 7-25. இதிலிருந்தே எந்த அளவுக்குத் தவறான முறையில் இந்தத் திட்டங்கள் எல்லாம் தோல்வியடைந்திருக்கின்றன என்பது தெரியும். 1967ம் ஆண்டுக்குப் பிறகு இந்தத் தொழிலை மூடிவிட வேண்டிய நிலைமை ஏற்பட்டது. அவர்களுக்குக்கொடுத்த பணத்தைத் திருப்பிக்கொடுக்க வேண்டும் என சர்க்கார் நடவடிக்கை எடுத்தது. 1967 நவம்பர் மாதம் வரையில் அந்தப் பணத்தை வசூல் செய்ய முடியவில்லை. அதிகாரிகளை மட்டுமே நம்பி தொழில்களில் ஈடுபடுவதன் மூலமாகத்தான் இந்த நஷ்டங்கள் ஏற்படுகின்றன. ஆகவே தொழிலாளர்களை நம்பி தொழிலாளர் கமிட்டிகளை உருவாக்கி அந்த அடிப்படையில்தொழில்களில் ஈடுபட்டால் வருங்காலத்தில் லாபகரமாக நடக்க முடியும் என்பதைக் கூறி கொண்டு பஞ்சாலைகளைப் பொருத்தவரை எல்லாநடவடிக்கைகளையும் எடுத்துக் கொள்ள வேண்டும் என்று கேட்டுக் கொள்கிறேன்.

# போக்குவரத்து ஊழியருக்கு இடைக்கால நிவாரணம் தருக

## சட்ட மன்றத்தில் தோழர் எம். பூபதி பேச்சு

மோட்டார் போக்குவரத்து துறைக்கு ரூ 14 கோடி மானியம் கோரப்பட்டுள்ளது 75 மைல்களுக்கு அப்பால் ஓடுகிற சென்னையிலிருந்து புறப்படுகிற, வந்து சேருகிற கன்யாகுமரி வரையுள்ள பஸ்கள் அத்தனையையும் நாட்டுடமையாக்கும் திட்டத்தை வைத்துள்ளார்கள். ஆனால் இதுசாதாரணமாகக்குறைந்த பஸ் வைத்திருப்பவர்களையே பாதிக்கும் நிலை உள்ளது. பெருவாரியாகப் பொருளாதாரத்தை ஆட்டிப்படைக்கும் வல்லமை படைத்த பஸ் மன்னர்கள் பஸ்களை முதலில் எடுக்க வேண்டும். அம்முறையில் தான் அணுகும் முறை இருக்க வேண்டும் என்பது என்னுடைய அபிப்பிராயம்.

### மக்கள் வசதிகள்

வருவாய் கொடுக்கின்ற பொது மக்களுக்கு இந்தத் திட்டத்தில் போதுமான வசதிகள் செய்யப்படவில்லை. ஒதுக்கப்பட்டுள்ள ஒரு சில நிதிகள்கூட சரியான முறையில் உபயோகப்படுத்தப்படவில்லை. 1967 ஏப்ரல் முதல் தேதி வளர்ச்சி நிதி ரூ 24·26 லட்சம் இருந்தது. சென்ற 1967–68-ல் சேர்ந்த தொகை ரூ. 1·64 லட்சம். இதிலே சென்ற ஆண்டு ஒரு காசுகூட செலவிடப்படவில்லை.

பணத்தை ஈட்டுகின்ற தொழிலாளர்களின் பிரச்னைகளைத் தீர்ப்பதற்கு போதுமான ஏற்பாடு செய்யப்படவில்லை என்பது சொல்லாமலே விளங்கும். விபத்து சேமிப்பு நிதி, துயர் துடைப்பு நிதி என்ற முறையில் சில ஆயிரக் கணக்கான ரூபாய்களே செலவிடப்பட்டிருக்கின்றன. 10 ஆயிரத்துக்கும் மேற்பட்ட தொழிலாளர்கள் வேலை செய்யும் இந்தத் துறையில் அவர்களுக்கு அடிப்படை மாற்றத்தை உருவாக்க வேண்டும். அவர்கள் இன்றைக்கு சம்பளம், பஞ்சப்படி, போனஸ், வீட்டு வசதி ஆகியவற்றில் அடிப்படை மாற்றம் கோருகின்றனர். அவைகளைக் கொடுப்பதற்கு அரசு உடனடியாக முன்வரவேண்டும்.

### சம்பள விகிதம்

நமது அரசு டிரைவருக்கு ரூ. 80—2—100 என்ற அடிப்படையில் முதல் கிரேடுக்கும் ரூ. 90—3—120 என்ற அடிப்படையில் இரண்டாவது கிரேடுக்கும் சம்பளம் தருகிறது. முதல் கிரேட் கண்டக்டருக்கு ரூ. 70—2—90 என்ற அடிப்படையிலும் இரண்டாவது கிரேட் கண்டக்டருக்கு ரூ 80—3—110 என்ற அடிப்படையிலும் கொடுக்கிறது. செக்கிங் இன்ஸ்பெக்டருக்கு முதல் கிரேடுக்கு ரூ. 80-3-110 என்ற அடிப்படையிலும் இரண்டாவது கிரேடுக்கு 90—3—125 என்ற அடிப்படையிலும் சம்பளம் வழங்கப்படுகிறது. தனியார் ஸ்தாபனங்களை எடுத்துக்கொண்டால் டி. வி. எஸ். கம்பெனியில் டிரைவருக்கு ரூ. 175 அடிப்படைச் சம்பளம் தருகிறார்கள். கேரளத்தில் ரூ 210 தருகிறார்கள். நமக்கு அருகாமையில் இருக்கிற மாநிலத்தில் இப்படிக்கொடுக்கப்படும் சம்பளவிகிதம் இங்கே இருக்கிற நம்முடைய போக்குவரத்து ஊழியர்களுக்குத் தெரியும். இது அவர்களுடைய உற்சாகத்தைப் பாதிக்கச் செய்யும். அடுத்து தினசரி பாட்டாவை எடுத்துக்கொண்டாலும் இன்றைய தினம் டி. வி. எஸ். ஸ்தாபனத்தார் ரூ. 1—75 லிருந்து ரூ. 2-50 வரை கொடுக்கிறார்கள். ஏ. பி. டி கம்பெனியார் ரூ. 2-20 லிருந்து ரூ. 6 வரை கொடுக்கிறார்கள். கேரள அரசாங்கம் ரூ. 1-50 லிருந்து ரூ. 5 வரை கொடுக்கிறது. ஆனால் தமிழக அரசு ரூ. 1-10 லிருந்து ரூ. 1-25 வரைதான் கொடுக்கிறது. இப்போது 10 காசு அதிகரித்திருக்கிறார்கள் என்று நினைக்கிறேன். இதுபோதாது.

### வேலைநிறுத்த நோட்டீஸ்

தனிப்பட்ட கம்பெனிகளும் மற்ற மாநிலங்களிலும் போக்குவரத்து ஊழியர்களுக்கு போனஸ் கொடுக்கிறார்கள். ஆனால் தமிழக அரசு தரவில்லை. மற்ற லீவு போன்ற வசதிகளை எடுத்துக் கொண்டாலும் மற்றவர்கள் கொடுப்பதைவிட குறைவாகத்தான் கொடுக்கப்படுகிறது. சென்ற 8 ஆண்டுகளாக போக்குவரத்துத் தொழிலாளர் தங்களது நியாயமான கோரிக்கைகள் நிறைவேற்றபடும் என்று எதிர்பார்த்தார்கள். அவர்கள் மத்தியில் இன்றைய தினம் கொந்தளிப்பு ஏற்பட்டிருக்கிறது. கன்னியாகுமரியில் இருக்கிற தொழிலாளர்களும் சென்னையில் இருக்கிற தொழிலாளர்களும் வேலை நிறுத்த நோட்டீஸ் கொடுத்துள்ளார்கள்.

இன்றையதினம் தேய்மான நிதி ரூ. 5 கோடியே 41 லட்சம் இருக்கிறது. இந்த நிதி மெஷின்களுக்கு மட்டுமல்ல. தொழிலாளர்களும் தேய்ந்து கொண்டேயிருக்கிறார்கள். ஆகவே இந்த நிதியிலிருந்து எடுத்தாவது அவர்களுக்கு உதவி செய்தாக வேண்டும்.

இப்போது கிலோமீட்டருக்கு அரை பைசா உயர்த்தியிருக்கிறார்கள். ஒரு பஸ் ஒரு நாளில் ஓடும் தூரம் 150 கிலோ மீட்டர் என்றாலும் ஒரு பஸ்ஸில் 50 பேர் பயணம் செய்கிறார்கள் என்று கொண்டாலும் நம்மிடமுள்ள 1500 பஸ்களில் 1000 பஸ்கள் ஓடுவதாக வைத்துக்கொண்டாலும் ஒரு ஆண்டில் கிட்டத்

(7-ம் பக்கம் பார்க்க)

# கண்ணோட்டம்

## இடதுசாரித் திருத்தல்வாதம் சங்கராச்சாரியாரிடம் சரணாகதி !

போலித்தனமான இடது சாரிக் கோஷங்களை முழங்கிக் கொண்டு தீவிரவாதிகள்எனப் பாசாங்கு செய்யும் ஒரு கோஷ்டி ஒன்றுள்ளது. கம்யூனிஸ்ட் கட்சி (மார்க்சிஸ்ட்) யிலிருந்து கட்சி விரோத நடவடிக்கைகளுக்காக வெளியேற்றப்பட்டவர்கள்இவர்கள் என்பதை அனைவரும் அறிவர். இவர்கள் "புதிய தலைமுறை" என்ற "தத்துவ இலக்கிய" வெளியீடு ஒன்றை வெளியிடுகிறார்கள். இதில் "அறிவும் அன்பும்" என்ற தலைப்பில் ஜனவரி '68 இதழில் ஒரு கட்டுரை வெளியாகியிருக்கிறது. இந்தக் கட்டுரை ஒரு தத்துவக் கட்டுரை எனவும் விளம்பரப்படுத்தப் பட்டுள்ளது. அறிவு வழியில் மிகமுக்கியமான ஆசான் ஆதிசங்கரர் என்றும் அன்பு வழியின் ஆசான் வைணவ ஆழ்வார்கள், சைவநாயன்மார்கள் மத்துவர்கள் போன்றவர்கள் என்றும் இந்தத் தத்துவ ஆராய்ச்சி ஆரம்பமாகிறது.

இந்த ஆராய்ச்சி அவர்களுடைய இன்றைய குழப்பத்துக்கும் தத்துவபோலித்தனத்துக்கும் ஒரு எடுத்துக்காட்டு. அறிவா அன்பா என்று கேள்வி கேட்டுப் பதில்கூற முயல்வது விசித்திரமானது. முட்டை தோன்றியது முதலிலா? குஞ்சு தோன்றியது முதலிலா? வித்து முதலா? மரம் முதலா? என்று கேட்டு லாவணி பாடிக் கொண்டிருக்கும் கூட்டத்தைப் போலவே இந்த அதி தீவிரவாதிகள் என்று சொல்லிக்கொள்வோரின் தத்துவ லாவண்யமும் உள்ளது. அன்புவழி என்பது, பக்தி இயக்கமாம்! விலங்கு நிலையில் அன்பு தோன்றுவதில்லையாம்! இன அறிவு என்பது அறிவின் உயர்ந்த கட்டமாம்! அன்பைத் துறந்து அறிவு ஆதிக்கம் பெறுமேயானால் அங்கு சமுதாயம் அணு அணுவாகப் பிரிந்து விடுமாம்! (ஐயோ பாவம்!) அன்பற்ற சமுதாயத்தை நினைத்துப் பார்த்தாலே இந்த அராஜக வாதிகளுக்குப் பயங்கரமானதாக இருக்கிறதாம். (எமது அனுதாபம்) இப்படியெல்லாம் ஆராய்ச்சி பண்ணி ஆராய்ச்சி பண்ணி இறுதியில் "அன்பைக் காட்டுவதே வைணவம்" என்று மகாத்மா காந்தி விளக்கம் கூறியதையும் சுட்டிக்காட்டுகிறார்.

### முகமூடி கிழிகிறது

இந்த அராஜக வாதிகள் ஏட்டின் தத்துவ நிபுணர் "ரமணன்" என்பவர். இத்துடன் நின்றாரா? இறுதியாக அந்த அறிவும் அன்பும் என்ற கட்டுரையில் இந்தத் தத்துவ மேதை எழுதியுள்ளது இதோ:—

'எத்தகைய உன்னதமான குறிக்கோளும் அன்பைத் தன் அடித்தளத்தில் கொள்ளாதிருக்க முடியாது. அவ்வாறே அறிவின் ஆதாரத்தையும் கொண்டதாக இருக்க முடியும். இத்தகைய குறிக்கோளை அன்பும் அறிவும் என்ற வழிமுறையைக் கொண்டுதான் அடைய இயலும். இதை மறந்த எவருமே மக்களுக்கு உன்னதமான வழியைக் காட்டமுடியாது. ஸ்டாலின் போன்ற தீவிரமான அரசியல் வாதியின் தோல்வியை வேறெந்த அடிப்படையிலும் விளக்குவது எளிதல்ல. அவருக்கு அன்பு என்னும் ஆயுதத்தை எங்கு எவ்விதம் உபயோகிக்கவேண்டும் என்றே புரியவில்லை என்றே நமக்கு தோன்றுகிறது.'

அறிவையும் அன்பையும் ஆராய்ச்சி செய்யப் புகுந்த இந்த இடதுசாரிப் புரட்டர்களுக்கு ஸ்டாலின் தங்களது தத்துவ விரோதியாகக் காட்சியளித்ததில் ஆச்சரியம் இல்லை ஸ்டாலின் காட்டியது மார்க்சிச லெனினிச வழி என்று ஒரு காலத்தில் இவர்கள் கூறிக்கொண்டதெல்லாம் அந்த ஏமாற்றுவித்தை என்பதும் மார்க்சிசம்-லெனினிசத்தின் எதிரிகள் இவர்கள் என்பதும் ஸ்டாலினைப்பற்றிய இவர்களுடைய இந்தப் பார்வையிலிருந்து அம்பலமாகிறது. மார்க்சிய முகமூடி கிழிந்துவிடுகிறது.

சோவியத் திருத்தல்வாதிகள், ஸ்டாலின் காலம் தங்களுக்கு ஒரு இருண்ட காலம் என்று பார்ப்பது போலவே, மார்க்சிசம் -லெனினிசத்தைக் கைவிட்ட மேற்கூறிய அராஜகஇடதுசாரிதிருத்தல்வாதக் கும்பலும்பார்க்கிறது. "ஸ்டாலின் போன்ற தீவிரமான மாபெரும் அரசியல் வாதியின் தோல்வி" என்று அவர்கள் சுட்டிக் காட்டுவதிலிருந்து தெளிவாகிறது இவர்களுடைய யோக்கியதை அம்பலமாகிறது. ஸ்டாலின் தோல்வியடைந்ததாகப் பார்க்கும் பார்வை இன்றைய சோவியத் திருத்தல் வாதத்தின் பார்வையாகும். இது ஒருபுறம்.

ஸ்டாலின் காலத்திலும் அவருக்குப் பின்னும் அவர் ஒரு "முரடன்". அவருக்கு "அன்பு" என்பதே இல்லை "தயவுதாட்சண்யமே" இல்லாத மனிதர் என்று உலகெங்குமுள்ள ஏகாதிபத்தியவாதிகளும் ஏகாதிபத்தியத்துக்குத் துதிபாடியவர்களும் வண்டி வண்டியாக எழுதித்தள்ளினர்கள். இதன் மூலம் சோவியத் நாட்டில் நடந்த மகத்தான முதல் பாட்டாளிவர்க்கப் புரட்சியை மாசுபடுத்த முயற்சித்தார்கள். அந்தப் புரட்சியில் "அன்பு" என்பதே இல்லை. "எல்லாம் பலாத்காரம்" என்றனர். "ரத்த ஆற்றின் குறுக்கே நடந்து சென்று நல்ல காரியத்தைச் செய்ய நினைப்பவர் ஸ்டாலின்" என்று ஒருதடவை மகாத்மாகாந்தி கூறினர் அல்லவா! அதே போன்று ஏகாதிபத்தியவாதிகளும் ஒவ்வொரு நாட்டு முதலாளிகளும் பிரசாரம் செய்தனர்; செய்கின்றனர். இதற்குக் காரணம் வேறொன்றுமல்ல. முதலாளித்துவத்தையும் ஜாரின் சர்வாதிகாரத்தையும் எதிர்த்து ருஷ்யப்பாட்டாளி வர்க்கம்புரட்சி செய்தது தவறு என்று இவர்கள் கருதுகின்றனர். உலகிலேயே புதுமையான தொரு புரட்சி. இன்று உலகில் மூன்றிலொரு பகுதி மக்கள் புது வாழ்வு வாழ்வதற்கு வழி வகுத்த முன்னோடியான புரட்சி அது. ஆகவே முதலாளிகள் இதை வெறுப்பது இயல்பு. ஏகாதிபத்தியவாதிகள் எதிர்ப்பது இயல்பது. முதலாளியை எதிர்த்துப் புரட்சி நடத்திய செயல் முரட்டுத்தனமான செயல் அல்லது அன்பற்ற செயல் என்று அவர்கள் கூச்சல் போடுவது இயல்பு.

ஆனால் தாங்களும் மார்க்சியவாதிகள் என்று கூறிக்கொள்ளும் இந்த அராஜகக் கும்பலின் தத்துவ ஆசிரியர் என்று கூறிக்கொள்ளும் ஒரு நபர் ஸ்டாலினிடத்தில் அன்பில்லை அதனால்தான் அவர் தோல்வியடைந்தார் என்று எழுத முன்வந்திருக்கிறார் என்றால் என்ன பொருள்? ஏகாதிபத்தியத்துக்கும் முதலாளிகளுக்கும் பிரச்சார ஒப்பந்தம் செய்துகொண்டு அவர்களுடைய ஏஜெண்டுகளாக பிரச்சாரம் செய்ய முன்வந்திருக்கிறார் என்பதுதானே பொருள்?

இந்த அராஜகவாதிகளின் தத்துவ ஆசிரியர் அத்துடன் நிற்கவில்லை மேலும் எழுதுகிறார். 'முறைதவறினும் குறியும் தவறும் என்பது நமது இறுதி முடிவு. குறிக்கோள் மட்டுமே முக்கியம் முறையைப் பற்றி கவலை இல்லை என்பவன் மக்களுக்கு நம்பிக்கை யூட்ட இயலாது.' இவ்வாறு லட்சியத்தை அடையும் வழி, அதாவது அன்புவழி, அதாவது முன்பு விளக்கப்பட்ட சங்கராச்சாரியாரின் வழி, காந்தி வழி ஸ்டாலினிடத்தில் இல்லாத ஒரு வழி முக்கியமானது என்பதை வலியுறுத்தி, இந்த இடதுசாரித் திருத்தல் வாதிகள் ஸ்டாலின் காட்டிய மார்க்சிய லெனினிய வழியை எதிர்க்க முன்வந்திருப்பது ஆச்சரியமில்லை. அதிதீவிரவாதம் சங்கராச்சாரியாரிடம் சரணாகதி அடைவது இயல்பே. மார்க்சிசம்-லெனினிசத்திலிருந்து தடம்புரண்டால் அது அதிதீவிரமாகவும் இருக்கும் பார்வைக்கு! நடைமுறையில் சங்கராச்சாரியாரிசமாகவும் இருக்கும்! அது ஏகாதிபத்தியத்துக்குப் பிரசாரம் செய்யும் தொண்டூழியமாகவும் இருக்கும்! ஸ்டாலினை அவதூறு செய்த சோவியத் திருத்தல் வாதமாகவும் இருக்கும்! இனம் இனத்தோடு சேருவது இயல்பு.

—மார்க்சிஸ்ட்

## "தீக்கதிர்" சிறப்பு மே மலர்

### ஒரு வேண்டுகோள்

மே முதல் நாள் உலகப் பாட்டாளி வர்க்க தினமாகும். ஒளி மிகுந்த வழிவகுத்துவரும் உலகப்பாட்டாளி வர்க்கத்தின் போராட்டங்களையும், சென்ற 50 ஆண்டுகளில் அதன் தலைமையின் கீழ் நடந்த மகத்தான சாதனைகளையும், அரசியல், பொருளாதார தத்துவார்த்த கலைத்துறைகளில் ஏற்பட்டுள்ள மகத்தான மாறுதல்களையும் படம் பிடித்துக் காட்டும் அரும்பெரும் எழுத்தோவியங்களைத் தாங்கி வெளிவரப்போகிறது. கட்சியின் முக்கியதலைவர்கள் அனைவரும் இதற்கு எழுதுகிறார்கள். கட்சியின் தலைவர்கள் மட்டுமின்றி பல்வேறு துறைகளில் பணியாற்றும் தோழர்களும், கட்சியின் ஆதரவாளர்களும் தங்கள் பங்கினை ஆற்ற முன்வரவேண்டும் என்று வேண்டுகிறோம்.

### கட்டுரைகள் கவிதைகள்

கடந்த காலத்தில் தொழிலாளர் விவசாய நடுத்தரவர்க்க பகுதியினர் மாணவர்கள் மாதர் ஆகியப்பிரிவினரின் உரிமை முழக்க இயக்கங்களில் பங்கு கொண்டோர் போராட்டங்களைப் பற்றியும் பங்குகொண்டு தியாகம் செய்த தோழர்களைப்பற்றியும் கட்டுரைகளாக எழுதி அனுப்பவேண்டுகிறோம். இவை கட்டுரைகளாக இருக்கலாம், கவிதைகளாகவும் இருக்கலாம். ஏப்ரல் 15க்குள் அனுப்பவும்.

இப்பொழுது வெளிவரும் தீக்கதிர் பாதி அளவில் 80 பக்கங்கள் கொண்டதாக மலர் இருக்கும். விலை ரூ. 1-00 பிரதி ஒன்றுக்கு ரூ. 1 வீதம் முன் பணம் அனுப்பியவர்களுக்குத்தான் மலர் அனுப்பப்படும். இதுவும் ஏப்ரல் 15க்குள் அனுப்புவோருக்கே பிரதிகள் அனுப்பப்படும்.

மே மலர் விரும்பும் சந்தாதாரர்கள் ஏப்ரல் 15க்கு முன்னதாகத் தனியாக ரூ. 1 அனுப்ப வேண்டும் வாரந்தோறும் அனுப்பும் பிரதியுடன் அவர்களுக்கு மே மலரும் அனுப்பிவைக்கப்படும்.

5 பிரதிகளுக்குமேல் வாங்குவோருக்கு 25 சதவிகித கமிஷன் உண்டு.

### விளம்பரம்

மே மலருக்கு தோழர்கள் விளம்பரங்கள் வாங்கி முன்பணத்துடன் அனுப்பும்படி வேண்டுகிறோம்.

விளம்பர விகிதம் வருமாறு :

| | |
|---|---|
| ஒருபத்தி — 2·5 சென்டி மீட்டருக்கு (1 அங்குலம்) | ரூ. 5 |
| தீக்கதிர் மே மலர் ஒரு பக்கத்துக்கு | ரூ. 100 |
| அரைப் பக்கத்துக்கு | ரூ. 50 |
| மேல் அட்டையில் ஒரு பக்கத்துக்கு | ரூ. 200 |
| அரைப் பக்கத்துக்கு | ரூ. 100 |

நிர்வாகி
"தீக்கதிர்"

## கல்லூரி கடை நிலை ஊழியர் போராட்டம்

காரைக்குடி அழகப்பா கல்லூரிகளின் கடை நிலை ஊழியர் பஞ்சப்படி உயர்வு, 8மணி நேர வேலை, விடுமுறை முதலிய கோரிக்கைகளுக்காக 26-3-68 முதல் உண்ணாவிரதப் போராட்டம் நடத்தி வருகின்றனர்.

## மதுரை மாவட்ட ரிக்ஷா தொழிலாளர் சங்கம்

மதுரை மாவட்ட சைக்கிள் ரிக்ஷா தொழிலாளர்கள் மகாசபைக் கூட்டம் 24-3-68-ம் தேதி தோழர் குன்னிமலை தலைமையில் நடைபெற்றது.

ரிக்ஷா வண்டிகளுக்கான நம்பர் தகட்டை தொழிலாளியின் பெயருக்கு வழங்கக்கோரியும் வண்டி ஒன்றுக்கு இரண்டு டிரைவர்கள் வீதம் லைசென்ஸ் வழங்கக் கோரியும் குறைந்தது 3 வருடங்கள் ஓட்டிக் கொண்டிருக்கும் டிரைவர்களுக்கு முதற்சலுகை கொடுக்கக் கோரியும் தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன.

வி. எஸ். மணியைத் தலைவராகவும் முத்துவேலை உபதலைவராகவும் பி. சுந்தரராஜனை செயலாளராகவும், [illegible] சொர்ணசிகாமணி, பி பெருமாள் ஆகியோரைத் துணைச் செயலாளராகவும் மற்றும் 12 பேரை உறுப்பினர்களாகவும் கொண்ட நிர்வாகக் குழு அமைக்கப்பட்டது.

(6-ம் பக்கத் தொடர்ச்சி)

தட்ட ரூ. ஒன்றரைக்கோடி வருவாய் வரக்கூடும். போக்குவரத்துத் தொழிலாளர்களுடைய கோரிக்கைகளை நிறைவேற்ற நமக்கு ரூ 5 லட்சத்துக்குமேல் ஆகாது. தினசரி பாட்டாவை குறைந்த பட்சம் ரூ. 3 ஆக உயர்ந்த வேண்[illegible] என்று கேட்டுக்கொள்[illegible]றேன். தனியார் நடத்துகி[illegible] அமைப்புகளில் அட்ஜூடிகே[illegible]னுக்கு விட்டு இப்போது இடைக்கால நிவாரணம் கொடுக்கவேண்டும் என்று சொல்லியிருக்கிறார்கள். ஆகவே தமிழக அரசு போக்குவரத்து ஊழியரின் குறைகளை ஆராய ஒரு குழுவைப்போட்டு 6-மாதத்துக்குள் முடிவுக்கு வரக்கூடிய நிலையை உருவாக்க வேண்டும். இடைக்கால நிவாரணம் அளித்து அவர்களுடைய வேலை நிறுத்தத்தைத் தவிர்க்கவேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

# தொழில் நெருக்கடியை தடுக்க நடவடிக்கை எடுப்பீர்!

## நாடாளு மன்றத்தில் தோழர் கே. அனந்தன் நம்பியார் அறைகூவல்

நாடாளுமன்றத்தில் மார்ச் 18-ம் தேதி தோழர் கே. அனந்தன் நம்பியார் ஆற்றிய உரை வருமாறு :

இந்தச் சபையில் பேசுவதற்கு வாய்ப்பு அளித்தமைக்கு நன்றி. ஆனால் அதே சமயம் நம்நாட்டில் தொழில் அமைதியின்மை கடுமையாக உள்ளது என்பதைக் கூறவும் வருந்துகிறேன். தமிழ்நாட்டில் குறிப்பாக கோவையில் 15 ஜவுளி ஆலைகள் மூடப்படும் அபாயம் ஏற்பட்டுள்ளதை நீங்களும் அறிந்திருப்பீர்கள்.

இதன் மூலம் லட்சத்துக்கு மேற்பட்ட தொழிலாளர் வேலை இழக்கும் அபாயம் ஏற்பட்டுள்ளது. நிலைமை மிகவும் மோசமாகவுள்ளது. இவ்விஷயம் தொழில் அமைச்சகம், வர்த்தக, நிதி அமைச்சகங்களின் கவனத்துக்கும் கொண்டு வரப்பட்டுள்ளது. ஆனால் மூடப்படும் அபாயத்திலிருக்கும் 15 ஜவுளி ஆலைகள் சம்பந்தமாக மட்டுமின்றி கோவையில் கடந்த இரண்டு வருடங்களாக மூடப்பட்டுக் கிடக்கும் ஆலைகள் சம்பந்தமாகவும் இதுவரை எந்த நடவடிக்கையும் எடுக்கவில்லை. இந்த ஆலைகளை மீண்டும் திறக்க இயன்றதனைத்தையும் செய்வதாக தமிழக முதலமைச்சர் வாக்குறுதி அளிக்க வேண்டியிருந்தது. மத்திய அரசாங்கத்திடமிருந்து நிவாரணம் வரும் என்ற உறுதிமொழியின் அடிப்படையில் தான் தமிழக முதலமைச்சர் அவ்விதம் கூறினார். ஆனால் துரதிர்ஷ்டவசமாக மத்திய அரசாங்கம் அந்த வாக்குறுதியை நிறைவேற்றவில்லை என்று இப்போது அறிகிறோம். இதனால் தமிழக அரசு மிகவும் கஷ்டமான நிலையில் சிக்கியுள்ளது. இதனால் மிகவும் மோசமான சூழ்நிலை எழுந்துள்ளது. கோவைமாவட்டத் தமிழக தொழிலாளி வர்க்கம் முழுதும் பெரும் வேலை நிறுத்தப் போராட்டத்தில் இறங்கி உற்பத்தி பாதிக்கப்படக்கூடிய நிலைமை எழுந்துள்ளது. இந்த நிலைமையை மத்திய அரசாங்கம் ஆழ்ந்து பரிசீலிக்கவேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறோம்; இல்லாவிட்டால் தமிழ் நாட்டிலும் அண்டை மாநிலங்களிலும் நிலைமை பெரிதும் சீர்குலைந்து சட்டம் அமைதிப் பிரச்னையாக உருப்பெறும். அது தற்போதைய மொழிப் பிரச்னையுடன் சேர்ந்து மேலும் குழப்பத்தை யுண்டாக்கும். ஆகவே உடனடியாக ஏதாவது செய்தாக வேண்டும்.

### சுருட்டுத் தொழிலுக்கு ஆபத்து

மத்திய வரவு செலவுத் திட்டத்தை வெளியிடும் சமயத்தில் நிதியமைச்சர் பரிசீலிக்க வேண்டிய மற்றொரு விஷயத்தையும் குறிப்பிட விரும்புகிறேன். திருச்சியிலும் மற்ற இடங்களிலும் சுருட்டுத் தொழிற்சாலைகளுக்கு விதிக்கப்படும் லேபில் வரியைப்பற்றி குறிப்பிட விரும்புகிறேன். இச்சிறு குடிசைத் தொழிலில் ஆயிரத்துக்கு மேற்பட்ட தொழிலாளர்கள் ஈடுபட்டுள்ளனர். அவர்கள் இந்தியாவுக்கு அந்நியச் செலாவணியையும் ஈட்டித் தருகின்றனர். நம்முடைய சுருட்டுகள் உலகப் பிரசித்தம் வாய்ந்தவை. அவைகள் அந்நிய நாடுகளுக்கு அனுப்பப்படுகின்றன. நம்முடைய நாட்டிலிருந்துதான் மேற்கத்தி நாடுகள் சுருட்டுகளை இறக்குமதி செய்கின்றன. மத்திய அரசாங்கத்தின் ஆதரவற்ற நிலை காரணமாகவும் குறிப்பாக அதிகரித்துவரும் எக்சைஸ் வரி காரணமாகவும் சுருட்டுத் தொழில் அடியோடு மூடப்படும் அபாயத்துக்கு இப்போது உள்ளாகியுள்ளது. ஆண்டுதோறும் இது ஏற்பட்டுக் கொண்டே வருகிறது. துவக்கக் கட்டத்திலேயே புகையிலைக்குவரி விதிக்கப்படுகிறது. புகையிலையின் விலையுடன் எக்சைஸ் வரியும் சேர்கிறது. மத்திய அரசின் ஆதரவற்ற நிலை காரணமாக விலைகள் ஏறியிருப்பதால் தொழிலாளர்களுக்கும் அதிகக் கூலி கொடுக்க வேண்டியுள்ளது. சுருட்டு தயாரிப்புடன் லேபல் வரி விதிக்கப்பட்டு அது புகைக்கப்படும் போது விற்பனைவரி விதிக்கப்படுகிறது. எனவே புகையிலை பயிரிடப்படும் கட்டத்திலிருந்து புகைக்கப்படும்வரை வரிவிதிக்கப்படுகிறது. இது இத் தொழிலையே சாகடித்துள்ளது. இத்தொழில்மீது பட்சாதாபம் காட்டுமாறும் இதில் ஈடுபட்டுள்ள ஆயிரம் குடும்பங்கள் மீதுபட்சாதாபம் காட்டுமாறும் அந்நியச் செலாவணியை ஈட்டித்தரும் தொழிலைச் சாகடிக்காதிருக்குமாறும் நிதியமைச்சரை நான் கேட்டுக்கொள்ளுகிறேன். இந்தத் தொழிலின் மூலம் நாம் நிச்சயமாக அந்நிய செலாவணியை ஈட்ட முடியும் என்று உணரும் போது இதைக் காப்பாற்ற ஏதாவது செய்யவேண்டும்.

### கைத்தறி தொழிலின் நிலைமை

தமிழ்நாட்டின் கைத்தறி தொழிலைப்பற்றியும் குறிப்பிட விருப்புகிறேன். லட்சக்கணக்கில் மதிப்புள்ள கைத்தறி ஜவுளிகள் தேங்கிக்கிடப்பதை பத்திரிகை செய்திகளின் வாயிலாக அனைவரும் அறிந்துள்ளோம். அதை விற்பனைசெய்ய முடியவில்லை. ரிசர்வ் பாங்கின் ஆதரவற்ற நிலை காரணமாக மேலும் உற்பத்திக்கு இடையூறு நேர்ந்துள்ளது. கைத்தறி கூட்டுறவு சொசைட்டிகளுக்கு அது எந்த உதவியும் அளிக்கவில்லை. இவ்விஷயத்தைப்பற்றி ஏற்கனவே நான் குறிப்பிட்டுள்ளேன். அமைச்சரிடமும் முறையீடு செய்துள்ளேன். ஆனால் எந்த நடவடிக்கையும் எடுக்கப்படவில்லை. அரைப்பட்டினி கிடக்கும் லட்சக்கணக்கான நெசவாளர்களை முழுப்பட்டினி நிலைக்கு உள்ளாகிவரும் நெசவாளர்களைக் காக்க ஏதாவது நடவடிக்கை எடுக்க வேண்டும்.

ஒவ்வொரு தொழிலும் பாதிக்கப்பட்டு வருவதை நாம் பார்த்துவருகிறோம். மத்திய அரசு உறுதியான நிலையை மேற்கொண்டு நடவடிக்கை எடுக்காவிட்டால் சோஷலிசம், சோஷலிசபாணி பிரச்னை இருக்கட்டும் ஏழை மக்களையே காப்பாற்ற முடியாமல் போய் விடும். எல்லாம் பேச்சளவில் நிற்கிறதேயொழிய செயலில் ஒன்றையும் காணவில்லை. மக்கள் பட்டினிகிடந்து மடிந்து கொண்டிருக்கிறார்கள். அவர்களைக்காக்கவேண்டும். இல்லாவிட்டால் நாடு மிகவும் கஷ்டமான நிலைக்கு உள்ளாகும்.



---

(5-ம் பக்கத் தொடர்ச்சி)

குழுவினருக்கு பாடந்தறை, முதிரக்கொல்லி, குற்றிமுச்சி, பாட்டவயல், பந்தப்ளாவு உப்பட்டி, எருமாடு, சோம்பாடி, தேவாலா என்ற இடங்களில் விவசாயிகள் உணவு தந்தனர். காரக்கொல்லி, உப்பட்டி, எருமாடு, சேராம்பாடி, தேவாலா ஆகிய இடங்களில் நடைபெற்ற பொதுக்கூட்டங்களில் தோழர்கள் ராஜன், குட்டன், டருஷ்ணன் குட்டி, பொன்னன், சி.பி. பாஸ்கரன், ஏ.கே. அப்துல்சத்தார் ஆகியோர்ா பேசினார்கள்.

## நாகை தாலுகா பாத யாத்திரை குழு

நாகை தாலுகா கமிட்டி 5-வது பாதயாத்திரைக்குழுவினால் வெண்மணச்சேரி, எட்டுக்குடி, திருவாய்மூர், திருக்குவளை, வாழக்கரை, மேலவாழக்கரை ஆகிய இடங்களில் மார் 24, 25 தேதிகளில் பொதுக்கூட்டங்கள் நடத்தப் பட்டது. அதில் பூந்தாழங்குடி வழக்கை வாபஸ்பெற கோரி தீர்மானம் நிறைவேற்றப் பட்டு முதலமைச்சருக்குத் தந்தி கொடுக்கப்பட்டது.

முப்பத்திகோட்டகத்தில் பாதயாத்திரைக் குழுவினருக்கு 26-3-68-ல் வரவேற்பு அளிக்கப்பட்டது. தெற்கு பனையூர் ஊராட்சிமன்ற தலைவர் பி. கணேசன் தலைமை வகித்தார். தோழர்கள் எஸ். கருணாநிதி, எஸ். சுப்பிரமணியம் கோரிக்கைகளை விளக்கிப் பேசினர். முதலமைச்சருக்கு தந்தி கொடுக்கப்பட்டது.

### மன்னார்குடி தாலுகாவில்

தஞ்சைமாவட்டம் மன்னார்குடி தாலுகாவில் மார்ச் 28-ம் தேதி விவசாயிகள் கோரிக்கைகளை வற்புறுத்தி புதுத் தேவங்குடி, களப்பால், தென்கரவாயல், காணூர், கருவாகுறிச்சி, வாண்டையக்குடிகாடு, செருமங்கலம் சுரேந்திரியம், கீழதொட்டி, அத்திக்கோட்டை, கீழவந்தான்சேரி, அரிச்சபுரம், ராஜப்பையன் சாவடி, காரிச்சாங்குடி, வையகளத்தூர், 141 நெம்மேலி, ஆலங்கோட்டை, நீடாமங்கலம், திருக்களார், பரவாக்கோட்டை, மன்னார்குடி ஆகிய இடங்களில் பொதுக் கூட்டங்கள் நடைபெற்றன. இக்கூட்டங்களில் தோழர்கள் ஏ. நடராஜன், ஐ. மாயாண்டி பாரதி, ஆர். ரெங்கன், ஏ.கே. கணேசன், வி. ராமகிருஷ்ணன் பி. வெங்கடேசன், என். ஆர். ரெங்கராசு, கே. பட்ராசு, ஏ. ஆர். ராமானுஜம் ஆகியோர் பேசினர்.

### பெரியகுளத்தில்

பெரியகுளத்தில் கோரிக்கை வாரத்தையொட்டி 31-3-68 மாலை முக்கிய வீதிகள் வழியாக விவசாயத் தொழிலாளர்கள் ஆர்ப்பாட்ட ஊர்வலம் நடத்தினர். நகரில் கோரிக்கைகள் பொறிக்கப்பட்ட தட்டிகள் கட்டப்பட்டிருந்தன.

---

(1-ம் பக்கத் தொடர்ச்சி)

நிலையில் காலவரையற்ற வேலை நிறுத்தத்தை தவிர வேறு வழியில்லை என்ற நிலையிலும் ஏப். 5ம் தேதி ஒரு நாள் வேலை நிறுத்தம் செய்வதென்றும் இப்போதாவது எல் ஐ.சி. நிறுவனம் நியாயத்தை உணர்ந்து பிரச்னைக்குச் சுமுகமான தீர்வுகான முயற்சிக்குமா என்று பார்ப்பது என்றும் பொது கவுன்சில் தீர்மானித்தது.

சம்பள விகிதங்களுக்கான ஒப்பந்தம் 31.12.66டன் முடிவடைந்தும் பாங்கு ஊழியருக்கு இரு முறை சம்பள விகிதங்கள் உயர்த்தப்பட்டிருந்தும் எல்.ஐ.சி. ஊழியரின் கோரிக்கை ஏற்கப்படாமலிருப்பதையும் பொதுக் கவுன்சில் சுட்டிக்காட்டியுள்ளது.

---

### ராஜபாளையம் மில் தொழிலாளர் தீப்பந்த ஊர்வலம்

ராஜபாளையம் ஜானகிராம் மில்லில் 3-மாதமாக சம்பளம் போடாததைக் கண்டித்து 26-3-68ம் தேதி இரவு 200 தோழர்களின் தீப்பந்த ஊர்வலம் நடைபெற்றது.

மில் முன்பாக நடந்த பொதுக்கூட்டத்தில் தோழர்கள் எம். ஆதிமூலம், மாதவன் வி. எஸ். பெரியசாமி பேசினார்கள்.

---

## வருந்துகிறோம்

தண்டலம் கிருஷ்ணபுரம் கம்யூனிஸ்ட் கட்சி (மார்க்சிஸ்ட்) கிளை செயலாளர் தோழர் ஆர். சின்னச்சாமியின் துணைவியார் எசோதாம்மாள் (வயது 28) கடந்த 24-3-68ல் காலமானார் என்பதை வருத்தத்துடன் அறிவிக்கிறோம்.

---

# வலது சாரிகளின் சொரூபம்

இந்திய நாட்டின் கம்யூனிச இயக்கத்துக்குத் தாங்கள் தான் வாரிசு என்று வலதுசாரிக் கம்யூனிஸ்டுகள் நாள் விடாமல் கூறிக் கொள்ளுகிறார்கள். பொதுத் தேர்தலில் வாக்காளர்கள் கம்யூனிஸ்ட் கட்சி (மார்க்சிஸ்ட்) யைத் தேர்ந்தெடுத்தாலும் சரி ஆட்சி பீடத்தில் அமர்த்தினாலும் சரி தங்களை மட்டுமே கம்யூனிஸ்ட் கட்சி என்று கூற வேண்டும் என்று வலதுசாரிகள் ஒற்றை காலில் நிற்கிறார்கள்.

ஆனால் கம்யூனிஸ்ட் இயக்கத்தில் தோன்றிய தியாகிகளுக்கு வலதுசாரிகள் காட்டும் மரியாதை என்ன தெரியுமா?

தஞ்சை மாவட்டத்தில் விவசாயிகள் இயக்கத்தை இன்னுயிரீந்து கட்டி வளர்த்த தியாகச் சுடர் களப்பால் குப்பு. அத்தகைய ஒப்பற்ற வீரனுக்கே அவமரியாதை செய்யத் துணிந்து விட்டனர் வலதுசாரிகள்.

களப்பால் குப்புவின் மைந்தன் கு. சிவஞானத்தின் திருமணம் களப்பாலில் 16-3-68ல் நடைபெற்றது. அந்தத் திருமணத்துக்கு யாரும் செல்லக் கூடாது என்று ஊர்க் கட்டுப்பாடும், ஜாதிக் கட்டுப்பாடும் செய்தனர் வலதுசாரி கம்யூனிஸ்ட் எம். எல். ஏ வான ஏ. கே. சுப்பையாவும் அக்கட்சியின் மாநிலக் குழு உறுப்பினரான முருகையனும். பந்தல் போடச் சென்ற உள்ளூர் ஆட்களையும் விரட்டியடித்தனர். வகுப்புவாத, நிலப்பிரபுத்துவ எண்ணத்தில் ஊறி போயிருக்கும் இந்தப் பேர்வழிகள் தங்களைக் கம்யூனிஸ்டுகள் என்று கூடக்கூறிக் கொள்ளுகின்றனர்! கம்யூனிஸ்ட் கொள்கைக்கும், வலதுசாரிகளுக்கும் ஏதாவது சம்பந்தமுண்டா? சாதாரண ஜனநாயகவாதிகள்கூட அருவருப்புடன் பார்க்கும் ஜாதிக்கட்டுப்பாட்டையும் வகுப்பு துவேஷத்தையும் தூண்டிவிடும் அளவுக்கு அவர்கள் தாழ்ந்து விட்டதை மேற்கூறிய தஞ்சை நிகழ்ச்சி நிரூபிக்கிறது.

---

**தீக்கதிர்**

**சந்தா விபரம்**

தனிப்பிரதி 20 காசுகள்

6 மாதச் சந்தா ரூ 5

1 வருடச் சந்தா ரூ. 10

டைம்ஸ் பிரஸ் (153, டாக்டர் நடேசன்ரோடு சென்னை-5)ல் அச்சிட்டு, வெளியிடுபவர், ஆசிரியர் : கே. முத்தையா